# அமீருக்குக் கட்டுப்படுதல்

# ஓர் ஆய்வு

ஆக்கம் பீ.ஜைனுல் ஆபிதீன்

பக்கங்கள் 88

விலை ரூபாய் 20.00

- அமீருக்குக் கட்டுப்படுவதன் அவசியம்
- அமீர் என்றால் யார்
- ஒரு நாட்டில் பல அமீர்கள் இருக்க முடியுமா
- அதிகாரமில்லாதவர் அமீர் என்று அழைக்கப்படலாமா
- இந்திய முஸ்லிம்களுக்கு அல்லது தமிழக மூஸ்லிம்களுக்கு அமீர் யார்
- தலமைப் பதவியின் வகைகள்
- இயக்கங்களின் தலைவர்கள் அமீர்கள் அல்லர்
- இந்தியாவில் யாரும் அமீர்கள் அல்லர்

என்பன போன்ற விஷயங்கள் தக்க ஆதாரங்களுடன் விளக்கப்பட்டுள்ளன.

## அறிமுகம்

இஸ்லாத்தின் பெயரால் உலகில் ஏராளமான இயக்கங்கள் உள்ளன. இந்த இயக்கங்களில் பெரும்பாலானவை இஸ்லாமிய நெறிமுறைகளுக்கு எதிரானவையாக இருந்த போதும் அந்த இயக்கங்களில் தம்மை இணைத்துக் கொண்டவர்கள் அந்த இயக்கங்களில் இருந்து விடுபடுவதற்கும், விலகுவதற்கும் தயங்குகின்றனர்.

காரணம் இயக்கத்தின் தலைவர் அமீர் என்ற பெயரில் அடையாளப்படுத்தப்பட்டுள்ளார். இஸ்லாத்தில் அமீருக்குக் கட்டுப்பட்டு நடக்குமாறு கடுமையாக வலியுறுத்தப்பட்டுள்ளதால், தான் சார்ந்துள்ள இயக்கம் தவறான இயக்கம் என்பது தெரிந்த பின்னும், தன் தலைவர் தவறான தலைவர் என்பது தெளிவாகத் தெரிந்த பின்னும் அதில் இருந்து விலக ஒருவர் தயங்குகிறார். இது அமீருக்குக் கட்டுப்படுதல் என்ற மார்க்கக் கடமையை மீறியதாக ஆகி அல்லாஹ்விடம் நாம் குற்றவாளியாக நேருமோ என்று அவர் அஞ்சுகிறார்.

மக்களிடம் காணப்படும் அமீர் பற்றிய இந்த அறியாமை தான் இஸ்லாத்தின் பெயரில் இயக்கம் நடத்துவோரின் ஒரே மூலதனமாக உள்ளது.

தங்களின் தவறான கொள்கை குறித்து தங்களின் தொண்டர்களிடம் விழிப்புணர்வு ஏற்பட்டு கேள்வி கேட்கும் நிலையோ, எதிர் விமர்சனம் செய்யும் நிலையோ ஏற்படும் போதெல்லாம் அவர்களை வாயடைக்கச் செய்ய இவர்களுக்கு உள்ள ஒரே ஆயுதம் அமீருக்குக் கட்டுப்படுதல் என்பது தான்.

நான் அமீர் ஆக இருக்கிறேன். அமீருக்குக் கட்டுப்படுவது மார்க்கக் கடமை. எனவே என்னை எதிர்ப்பதோ, கேள்வி கேட்பதோ என்னை விட்டு விலகுவதோ மாபெரும் பாவம் என்று தொண்டன் மிரட்டப்படுகிறான்.

அமீரிடம் எத்தகைய தவறுகளைக் கண்டாலும் அமீரிடம் இருந்து ஒருவன் விலகுவதற்கு அனுமதி இல்லை என்று மூளைச் சலவை செய்யப்படுகிறான். இதனால் தான் தவறான பல இயக்கங்கள் உயிர் பிழைத்துள்ளன.

தப்லீக் ஜமாஅத், ஜமாஅத்தே இஸ்லாமி, அஹ்லே ஹதீஸ், ஜிஹாத் என்ற பெயரில் ரகசிய இயக்கம் நடத்துவோர், கிலாஃபத் என்ற பெயரில் கள்ள இயக்கம் நடத்துவோர் ஆகிய அனைவரும் அமீருக்குக் கட்டுப்படுதல் என்பதைத் தான் கவசமாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

நாங்கள் உருவாக்கிய ஜாக் என்ற அமைப்பிலும் அமீர் என்ற சித்தாந்தம் உள்ளது. அதை நாமும் ஏற்றிருந்தோம். அமீருக்குக் கட்டுப்பட வேண்டும் எனக் கூறி தலைமைக்கு எதிராக நடப்பவர்களை நாமும் எச்சரித்தது உண்டு. காரணம் நாமும் அமீருக்குக் கட்டுப்படுவதைப் பற்றி இவர்கள் விளங்கியது போல் தான் விளங்கி இருந்தோம்.

இந்த நிலையில் ஜாக் இயக்கம் குர்ஆன் ஹதீஸுக்கு முரணாக பல நிலைபாட்டை எடுத்த போது தான் எங்களுக்குக் குழப்பம் ஏற்பட்டது. குர்ஆன் ஹதீஸுக்கு எதிரான கருத்தைச் சொல்லும் போது கூட எதிர்க்கக் கூடாது என்று மார்க்கம் சொல்லுமா? அமீருக்குக் கட்டுப்படுதல் எனக் கூறி தீமையையும், அநியாயத்தையும் தட்டிக் கேட்பதை இஸ்லாம் தடுக்காது என்று எங்கள் மனசாட்சிக்குத் தெரிந்தாலும் அமீருக்குக் கட்டுப்படுவது குறித்த ஆதாரங்கள் அனைத்தும் உண்மையானவையாகவும் இருந்தன.

எனவே நாம் புரிந்து கொண்டதில் எங்கோ தவறு நேர்ந்திருக்க வேண்டும் என்பது மட்டும் எங்களுக்குத் தெரிந்தது.

எனவே அமீருக்குக் கட்டுப்படுதல் குறித்து இன்றைக்கு தவ்ஹீத் ஜமாஅத்தில் உள்ள மூத்த அறிஞர்கள் பத்து ஆண்டுகளுக்கு முன் கூடி அமீர் குறித்து பல ஆய்வுக் கூட்டங்கள் நடத்தினோம்.

அமீருக்குக் கட்டுப்பட வேண்டும் என்பது எந்த அளவுக்கு உண்மையோ அது போல் இந்த நாட்டில் உள்ள எந்தத் தலைவரும் அமீர் கிடையாது என்பதும் உண்மையை என்பதை அப்போது தான் நாங்கள் அறிந்து கொண்டோம்.

அமீருக்குக் கட்டுப்படுவதற்கு மட்டும் அமீர் குறித்த ஆதாரங்களைத் தேடும் நாம் அமீர் என்றால் யார் என்பதற்கும் குர்ஆன் ஹதீஸில் இருந்து ஆதாரத்தைத் தேடி

இருந்தால் இது போன்ற மோசடி அமீர்களின் பிடியில் இருந்து விடுபட்டிருக்கலாமே என்றும், மக்களையும் விடுவிக்கலாமே என்றும் அப்போது தான் எங்களுக்குப் புரிந்தது.

எனவே இது குறித்து விரிவாக ஆய்வு நூல் எழுத வேண்டும் என்று அந்த அறிஞர்கள் கேட்டுக் கொண்டதன் அடிப்படையில் அமீர் ஓர் ஆய்வு என்ற நூலை எழுதி வெளியிட்டோம்.

அந்த நூல் வெளியான பின்னர் தான் ஜாக் இயக்கத்தின் தீய கொள்கைகளால் மனம் வெறுத்து அமீருக்குக் கட்டுப்படுதல் என்ற காரணத்தால் அமைதி காத்தவர்களும், சகித்துக் கொண்டு மன வெறுப்புடன் அந்த இயக்கத்தில் ஒட்டிக் கொண்டிருந்தவர்களும் அதில் இருந்து பெருமளவில் விடுபட்டனர்.

அமீருக்குக் கட்டுப்படுதல் என்ற போர்வையில் தலைவர்களின் அநியாயங்களைத் தட்டிக் கேட்கத் தயங்கிய பல சகோதரர்கள் அநியாயத்துக்கு எதிராகக் களம் இறங்கினார்கள். ஜாக் போதையில் இருந்து விடுபடலானார்கள்.

ஆனாலும் மற்ற இயக்கங்களில் அமீருக்குக் கட்டுப்படுதல் என்பது, தலைவர்களின் தவறுகளுக்கு எதிராகப் போர்க்கொடி தூக்க நினைப்பவர்களுக்கு இன்றும் தடையாக இருக்கத் தான் செய்கிறது.

எனவே ஏற்கனவே வெளியிட்ட அமீர் ஓர் ஆய்வு எனும் நூலை அமீருக்குக் கட்டுப்படுதல் ஓர் ஆய்வு என்று பெயர் மாற்றம் செய்து தேவையான பல விஷயங்களைச் சேர்த்தும் தேவையில்லாதவற்றை நீக்கியும் இந்த நூலை மீண்டும் வெளியிடுகிறோம்.

அன்புடன்

பீ.ஜைனுல் ஆபிதீன்

## அமீருக்குக் கட்டுப்படுதல் ஓர் ஆய்வு

இன்று இஸ்லாமிய சமுதாயத்தில் ஏராளமான கட்சிகள், இயக்கங்கள், அமைப்புக்கள், கழகங்கள், சங்கங்கள் எனப் பல்வேறு பெயர்களில் செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றன. இவற்றில் இன்றைய ஜனநாயக மரபுப்படி தலைவர், செயலாளர், பொருளாளர் என்ற அடிப்படையில் செயல் படக்கூடிய அமைப்புக்களும் உள்ளன. வெறும் தலைவரை மட்டும் வைத்துச் செயல்படும் அமைப்புக்களும் உள்ளன.

இந்த அமைப்புக்களில் ஒரு உறுப்பினர் தங்கள் தலைவருக்குக் கட்டுப்பட மறுத்து விட்டால் அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுப்பார்கள். அதைச் சகித்துக் கொண்டு அந்த உறுப்பினர் அந்த அமைப்பில் நீடிப்பார், அல்லது விலகி விடுவார். ஒழுங்கு நடவடிக்கை எடுத்தும் ஒருவர் திருந்தவில்லை என்றால் அவர் அந்த அமைப்பில் இருந்து நீக்கப்படுவார். இவையெல்லாம் அந்தந்த அமைப்புக்கள் கொண்டிருக்கும் நிர்வாக சுதந்திரம். இத்தகைய இயக்கங்கள் தங்களுக்குக் கட்டுப்படுவது மார்க்கக் கடமை எனக் கூறுவதில்லை. இதன் தலைவர்கள் அமீர் என்று அழைக்கப்படுவதும் இல்லை. ஆகவே இந்த அமைப்புகள் இந்த ஆய்வுக்குள் அடங்காது.

வேறு சில அமைப்புக்கள் உள்ளன. இந்த அமைப்புக்கள் தம்மை இஸ்லாமிய அமைப்புக்கள் என வாதிடுகின்றன. இவ்வமைப்புக்களின் தலைவருக்குக் கட்டுப்படுதலை மார்க்கத்தின் கடமைகளில் ஒன்று எனவும், அவ்வாறு கட்டுப்படாதவர் மார்க்கத்தை விட்டே வெளியேறி விடுவார் எனவும் கூறுகின்றன.

அமீருக்குக் கட்டுப்படுதலை வலியுறுத்துகின்ற குர்ஆன் வசனங்களையும், நபி மொழிகளையும் இவ்வமைப்புக்கள் தங்களின் வாதத்திற்குச் சான்றாக எடுத்து வைக்கின்றன. எனவே திருக்குர்ஆன், ஹதீஸ் ஒளியில் அமீர் மற்றும் அமீருக்குக் கட்டுப்படுதல் தொடர்பான அனைத்து அம்சங்களையும் முழுமையாக நாம் ஆய்வு செய்யக் கடமைப்பட்டுள்ளோம். எனவே அமீர் பற்றிய எல்லா விஷயங்களையும் ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

அமீருக்குக் கட்டுப்படுதலின் அவசியம்.

நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பி இருந்தால் அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுங்கள்! இத்தூதருக்கும், (முஹம்மதுக்கும்) உங்களில் அதிகாரம் உடையோருக்கும் கட்டுப்படுங்கள்! ஏதேனும் ஒரு விஷயத்தில் நீங்கள் முரண்பட்டால் அதை அல்லாஹ்விடமும், இத்தூதரிடமும் கொண்டு செல்லுங்கள்! இதுவே சிறந்ததும், மிக அழகிய விளக்கமுமாகும்.

திருக்குர்ஆன் 4:59

**حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ حَدَّثَنَا يَحْيَى حَدَّثَنَا شُعْبَةُ قَالَ حَدَّثَنِي أَبُو التَّيَّاحِ عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ اسْمَعُوا وَأَطِيعُوا وَإِنْ اسْتُعْمِلَ حَبَشِيٌّ كَأَنَّ رَأْسَهُ زَبِيبَةٌ**

காய்ந்த திராட்சை போன்ற தலையைக் கொண்ட அபீசினிய நாட்டுக்காரர் உங்களுக்கு அமீராக நியமிக்கப்பட்டாலும் நீங்கள் அவருக்குச் செவிசாயுங்கள், கட்டுப்படுங்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : புகாரி 693 மற்றும் 696, 7142

**و حدثني سلمة بن شبيب حدثنا الحسن بن أعين حدثنا معقل عن زيد بن أبي أنيسة عن يحيى بن حصين عن جدته أم الحصين قال سمعتها تقول حججت مع رسول الله صلى الله عليه وسلم حجة الوداع قالت فقال رسول الله صلى الله عليه وسلم قولا كثيرا ثم سمعته يقول إن أمر عليكم عبد مجدع حسبتها قالت أسود يقودكم بكتاب الله فاسمعوا له وأطيعوا**

உயர்வான அல்லாஹ்வின் வேதத்தின் படி உங்களை வழி நடத்திச் செல்லும் கருத்த, உடல் ஊனமுற்ற ஓர் அடிமை உங்களுக்கு அமீராக நியமிக்கப்பட்டாலும் அவருக்கு நீங்கள் செவிசாயுங்கள்! கட்டுப்படுங்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : உம்முல் ஹுஸைன் (ரலி)

நூல் : முஸ்லிம்.

**و حدثني محمد بن سهل بن عسكر التميمي حدثنا يحيى بن حسان ح و حدثنا عبد الله بن عبد الرحمن الدارمي أخبرنا يحيى وهو ابن حسان حدثنا معاوية يعني ابن سلام حدثنا زيد بن سلام عن أبي سلام قال قال حذيفة بن اليمان قلت يا رسول الله إنا كنا بشر فجاء الله بخير فنحن فيه فهل من وراء هذا الخير شر قال نعم قلت هل وراء ذلك الشر خير قال نعم قلت فهل وراء ذلك الخير شر قال نعم قلت كيف قال يكون بعدي أئمة لا يهتدون بهداي ولا يستنون بسنتي وسيقوم**

فيهم رجال قلوبهم قلوب الشياطين في جثمان إنس قال قلت كيف أصنع يا رسول الله إن أدركت ذلك قال تسمع وتطيع للأمير وإن ضرب ظهرك وأخذ مالك فاسمع وأطع

அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் தீமையில் இருந்தோம். இந்த நிலையில் அல்லாஹ் நன்மையைக் கொண்டு வந்தான். அந்த நன்மையில் நாம் இருக்கிறோம். இந்த நன்மைக்குப் பிறகு தீமை உண்டா? என்று நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்றார்கள். அந்த நன்மைக்குப் பிறகு தீமை உண்டா? எனக் கேட்டேன். அதற்கும் அவர்கள் ஆம் என்றார்கள். அது எப்படி இருக்கும்? என்று நான் வினவினேன். அதற்கு அவர்கள் எனது நேர்வழியைக் கொண்டு திருந்தாத எனது நடைமுறையைப் பின்பற்றாத தலைவர்கள் தோன்றுவார்கள். அவர்களில் மனித உடல்களையும், ஷைத்தானின் உள்ளங்களையும் கொண்ட மனிதர்கள் ஆட்சி செலுத்துவார்கள் என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதரே! அந்த நிலையை அடைந்து விட்டால் நான் என்ன செய்ய வேண்டும்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் அந்த அமீர் உன்னுடைய முதுகில் அடித்துத் தாக்கி, உன் பொருளைப் பறித்துக் கொண்டாலும் நீ அவருக்குச் செவிசாய்த்துக் கட்டுப்படு என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஹுதைபா (ரலி), நூல் : முஸ்லிம்.

حدثنا مسدد حدثنا يحيى بن سعيد عن عبيد الله حدثني نافع عن عبد الله رضي الله عنه عن النبي صلى الله عليه وسلم قال السمع والطاعة على المرء المسلم فيما أحب وكره ما لم يؤمر بمعصية فإذا أمر بمعصية فلا سمع ولا طاعة

பாவமான காரியத்தை ஏவாத வரை தான் விரும்பியவற்றிலும், விரும்பாதவற்றிலும் அமீருக்குச் செவி சாய்த்துக் கட்டுப்படுவது முஸ்லிமான ஒருவர் மீது கடமையாகும். அவர் பாவத்தை ஏவினால் செவிசாய்ப்பதோ, கட்டுப்படுவதோ கூடாது.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி)

நூல் : புகாரி 7144, மற்றும் 2955

حدثنا إسماعيل حدثني ابن وهب عن عمرو عن بكير عن بسر بن سعيد عن جنادة بن أبي أمية قال دخلنا على عبادة بن الصامت وهو مريض قلنا أصلحك الله حدث بحديث ينفعك الله به سمعته من النبي صلى الله عليه وسلم قال دعانا النبي صلى الله عليه وسلم فبايعناه فقال فيما أخذ علينا أن بايعنا على السمع والطاعة في منشطنا ومكرهنا وعسرنا ويسرنا وأثرة علينا وأن لا ننازع الأمر أهله إلا أن تروا كفرا بواحا عندكم من الله فيه برهان

எங்களது விருப்பிலும், வெறுப்பிலும் எங்களது கஷ்டமான சூழ்நிலையிலும், இலகுவான சூழ்நிலையிலும் எங்கள் மீது பாரபட்சம் காட்டும் நிலையிலும் நாங்கள்

(அமீருக்கு) செவிசாய்ப்போம், கட்டுப்படுவோம் என்றும் அல்லாஹ்விடமிருந்து அமைந்திருக்கும் ஆதாரத்தின் அடிப்படையில் தெளிவாகத் தெரியும் இறை நிராகரிப்பைக் காணாத வரை அதிகாரம் உடையவர்களிடம் போட்டி போட மாட்டோம் எனவும் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உடன்படிக்கை செய்தோம்.

அறிவிப்பவர் : உப்பாதா பின் ஸாமித் (ரலி)

நூல் : புகாரி 7056

அமீராக இருப்பவர், பாவமான காரியங்களைச் செய்யுமாறு கூறினால் அதில் தவிர மற்ற அனைத்திலும் அமீருக்குக் கட்டுப்பட வேண்டும் என்று மேற்கண்ட குர்ஆன் வசனமும், ஹதீஸ்களும் கூறுகின்றன. அமீர் என்பவர் எந்தக் குலமாக இருந்தாலும், உடல் ஊனமுற்ற அடிமையாக இருந்தாலும், அவர் நம்மை அடித்து நமது பொருளைப் பறித்தாலும் அவருக்குக் கட்டுப்பட்டே ஆக வேண்டும் என்பதையும் வலியுறுத்துகின்றன.

மேலும் அவரிடம் இறை நிராகரிப்பைக் காணாத வரை அவருக்குப் போட்டியாக இன்னொருவர் கிளம்பி விடக் கூடாது எனவும் கூறுகின்றன. பாவமான காரியங்களைச் செய்யுமாறு அமீர் நம்மை ஏவினால் அதைச் செய்யக் கூடாது எனவும், பாவமான காரியங்களை அமீர் செய்தால் அதற்காக அவர் ஏவக்கூடிய நல்ல காரியங்களில் அவருக்குக் கட்டுப்படாமல் இருக்கக் கூடாது எனவும் மேற்கண்ட ஹதீஸ்கள் குறிப்பிடுகின்றன. அமீரின் கட்டளைக்குக் கட்டுப்படுவதை வலியுறுத்திக் கூறுவதுடன் அமீரின் கட்டளையை மீறினால் கடுமையான விளைவுகள் ஏற்படும் எனவும் நபிமொழிகளில் கடுமையான எச்சரிக்கையும் காணப்படுகிறது.

**حدثنا مسدد حدثنا عبد الوارث عن الجعد عن أبي رجاء عن ابن عباس عن النبي صلى الله عليه وسلم قال من كره من أميره شيئا فليصبر فإنه من خرج من السلطان شبرا مات ميتة جاهلية**

ஒருவர் தனது அமீரிடம் எதையேனும் கண்டு வெறுப்படைவாரானால் அவர் சகித்துக் கொள்வாராக! ஏனெனில் ஒருவர் அமீரை விட்டு ஒரு ஜான் அளவு

வெளியேறி விட்டாலும் அவர் அறியாமைக் கால மரணத்தைத் தழுவுவார் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : புகாரி 7053

அமீரை விட்டு ஓர் இஸ்லாமியக் குடிமகன் விலகி அவருக்குக் கட்டுப்பட மறுத்தால் அவன் மறுமையில் நரகம் புகுவான் என்பதை இந்த ஹதீஸ் அறிவிக்கின்றது. எனவே அமீருக்குக் கட்டுப்பட்டே ஆக வேண்டும் என்பதில் யாருக்கும் மாற்றுக் கருத்து இருக்க முடியாது.

மேலும் அமீருக்குக் கட்டுப்படுவது வணக்க வழிபாடுகள் போல் வலியுறுத்தப்பட்டுள்ளதை மேற்கண்ட சான்றுகள் சந்தேகத்திற்கிடமின்றி தெளிவுபடுத்துகின்றன.

அமீருக்குக் கட்டுப்படுதல் என்பது தலைவன், தொண்டனிடையே ஏற்படும் சதாரண உறவு முறையல்ல. விரும்பினால் கட்டுப்பட்டு விட்டு, விரும்பாத போது வெளியேறி விடும் கட்சித் தலைமை போன்றதும் அல்ல. மாறாக அமீரிடம் எத்தகைய குறைபாடுகளைக் கண்டாலும் அவரை விட்டு விலகக் கூடாது, விலகுவது பாவம் என்ற அளவுக்கு வலியுறுத்தப்பட்ட மார்க்கக் கடமையாகும்.

எனவே இது விஷயத்தில் கூடுதலான ஆய்வையும் கவனத்தையும் நாம் செலுத்த வேண்டும்.

## அமீர் என்பவர் யார்

அமீருக்குக் கட்டுப்படுதலின் அவசியத்தை அறிந்து கொண்ட நாம் நமது அமீர் யார் என்பதை முதலில் அறிந்து கொள்ள வேண்டும்.

உலக முஸ்லிம்கள் அனைவருக்கும் ஒரேயொரு அமீரா? அல்லது நாடுகள் தோறும், ஊர்கள் தோறும் பல அமீர்கள் இருக்க முடியுமா? நாடுகள் தோறும் அமீர்கள் இருக்கலாம் என்றால் நாம் வாழும் இந்திய நாட்டில் முஸ்லிம்களின் அமீர் யார்?

அல்லது ஒவ்வொரு இயக்கத்துக்கும் ஒரு அமீர் இருக்கலாமா? அப்படியானால் அவர்களில் யாருக்குக் கட்டுப்படுவது? அல்லது அகில உலகுக்கும் ஒரே ஒரு அமீர் தான் இருக்க முடியுமா? அப்படியானால் அந்த ஒருவர் யார்? அதை எப்படித் தீர்மானிப்பது?

ஒரு மாநிலத்தில் நூற்றுக் கணக்கான இயக்கங்கள் இஸ்லாமிய அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளதாகக் கூறிக் கொண்டு அமீர்களையும் ஏற்படுத்தியுள்ளன. ஒவ்வொரு இயக்கமும் தத்தமது அமீருக்குக் கட்டுப்படுவது தான் மார்க்கக் கடமை எனக் கருதுகின்றன, பிரச்சாரமும் செய்கின்றன.

இன்னும் சொல்வதென்றால் ஒரே கொள்கை கோட்பாடுடையவர்கள் பல பிரிவுகளாகி ஒவ்வொரு பிரிவுக்கும் தனித்தனி அமீர்கள் உள்ளனர். இவர்களில் யாருக்குக் கட்டுப்படுவது?

அமீருக்குக் கட்டுப்பட்டு நடக்க ஆசைப்படுபவன் இந்தக் கேள்விகளால் குழம்பிப் போகின்றான்?

முஸ்லிம்களை ஓர் அணியில் ஒன்று திரட்டிக் கட்டுக்கோப்பைக் காப்பதற்காகத் தான் அமீருக்குக் கட்டுப்படுமாறு இஸ்லாம் கூறுகிறது. இதை ஒவ்வொரு முஸ்லிமுடைய மனசாட்சியும் ஒப்புக் கொள்கிறது. ஆனால் அமீர்கள் என்ற பெயரில் மக்கள் பிரிக்கப்பட்டு ஒற்றுமை குலைக்கப்படுவதைக் கண்டு அவன் தடுமாறுகிறான்.

ஏராளமான அமீர்கள் உருவாகும் போது சமுதாயம் பல பிரிவுகளாகச் சிதறுகிறது. அமீருக்குக் கட்டுப்படுதல் என்ற சித்தாந்தம் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டதால் ஒற்றுமைக்குப் பதிலாக வேற்றுமை ஏற்படுவதைக் காணும் ஒரு உண்மை முஸ்லிம் மேலும் குழம்பிப் போகிறான்.

ஒற்றுமை ஏற்படுத்துவதற்காக இஸ்லாம் ஏற்படுத்திய ஒரு சித்தாந்தம் ஒரு போதும் வேற்றுமை ஏற்படுத்தாது என்ற உணர்வோடு அமீருக்குக் கட்டுப்படுதலை நாம் ஆய்வு செய்தால் குழப்பங்கள் விலகும். தெளிவும் பிறக்கும். இன்ஷா அல்லாஹ்.

## தலைமைப் பதவியும் அதன் வகைகளும்.

அமீர் என்றால் தலைவர் என்பதை நாம் அனைவரும் அறிவோம். தலைவரைக் குறிப்பதற்கு அமீரைப் போலவே வேறு சொற்களும் அரபி மொழியில் காணப்படுகின்றன. அவை கலீஃபா, இமாம், அமீருல் முஃமினீன், அமீருல் ஆம்மா, மலிக், சுல்த்தான், ஆமில் ஆகியவையாகும்.

எனவே இந்தச் சொற்கள் அனைத்தையும் முழுமையாக நாம் ஆய்வு செய்வதின் மூலம் அமீர் என்பதற்கான சரியான இலக்கணத்தை நாம் அறிய முடியும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தான் இந்தச் சமுதாயத்தின் முதல் தலைவராக இருந்தார்கள். அமீருக்குக் கட்டுப்படுவதை வலியுறுத்திய அவர்கள் தம்மை அமீர் என்று சொல்லிக் கொள்ளவில்லை. நபித்தோழர்களாலும் அவர்கள் அமீர் என அழைக்கப்படவோ குறிப்பிடப்படவோ இல்லை.

அவர்களின் தலைமைத்துவம் அல்லாஹ்வின் தூதர் என்ற பெயராலேயே குறிப்பிடப்பட்டது.

## ரிஸாலத் - இறைத்தூதர் எனும் தகுதி

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வாழ்ந்து கொண்டிருந்த போது அந்தச் சமுதாயத்தின் தலைவராக அவர்களே இருந்தார்கள் என்பதை நாம் அனைவரும் அறிவோம். அவர்களின் தலைமை ஓர் வித்தியாசமான தலைமை எனலாம்.

அவர்கள் மக்காவில் இருந்த காலம் வரை ஒடுக்கப்பட்டு தனிமைப்படுத்தப்பட்டிருந்தாலும் மதீனா சென்று நல்லாட்சியை நிறுவிய பின் அந்தச் சமுதாயத்தின் ஆட்சித் தலைவராகவும் அவர்களே இருந்தார்கள். அதே சமயம் அல்லாஹ்வின் தூதர் என்ற முறையில் ஆன்மிகத் தலைவராகவும் அவர்கள் திகழ்ந்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் என்ற ஆன்மிகத் தலைமை, ஆட்சித் தலைமை என இரண்டு தலைமைகள் அவர்களிடம் இருந்தாலும் அவர்கள் ஆட்சித் தலைவர்

என்ற கருத்தைத் தரும் மேலே நாம் எடுத்துக் காட்டிய எந்த வார்த்தையையும் தமக்காகப் பயன்படுத்தியதில்லை. அவர்களிடம் பாடமும், பயிற்சியும் பெற்ற தோழர்களும் அவர்களை மன்னா! ஆட்சித் தலைவா! என்றெல்லாம் ஒரு போதும் கூறியதில்லை. மாறாக ஆன்மிகத் தலைமையைக் குறிக்கும் அல்லாஹ்வின் தூதர் என்பதைத் தான் நபித்தோழர்கள் பயன்படுத்தினார்கள்.

ஆட்சித் தலைவர் என்ற பொறுப்பைக் குறிக்கும் எந்த வார்த்தையும் நபியவர்களுக்குப் பயன்படுத்தப்படாமல் இருந்ததற்குக் காரணங்களும் இருந்தன.

முக்கியமான காரணம் என்னவெனில் நபியவர்கள் நடத்திய ஆட்சி தமது சுயவிருப்பத்தின் படி நடத்திய ஆட்சி அல்ல. மாறாக தொழுகை, நோன்பு போன்ற வணக்க, வழிபாடுகளை இறைவனிடமிருந்து அவர்கள் பெற்றது போல அரசு நடத்துவதற்கான சட்டங்களையும் அந்த இறைவனிடமிருந்தே பெற்றார்கள்.

அல்லாஹ்வின் தூதர் என்ற வார்த்தைக்கு அல்லாஹ்வின் ஆணைப்படி வணக்க வழிபாடுகளைக் கற்றுத் தந்து நடைமுறைப்படுத்துபவர் என்பது மட்டும் பொருளன்று. அல்லாஹ்வின் கட்டளைப்படி ஆட்சி நடத்துபவர் என்ற பொருளும் அதனுள் அடங்கி இருந்தது.

எனவே தான் அமீர், கலீஃபா, சுல்த்தான், அமீருல் முஃமினீன் என்பன போன்ற வார்த்தைகளால் நபியவர்கள் குறிப்பிடப்படவில்லை. அதை விட விரிந்த, அதே சமயம் ஆட்சித் தலைமையையும் உள்ளடக்கிய ரஸூலுல்லாஹ் - அல்லாஹ்வின் தூதர் - என்ற வார்த்தையால் அவர்கள் குறிப்பிடப்பட்டனர்.

ரிஸாலத் - நுபுவ்வத் என்பதில் ஆட்சியும் அடக்கம் என்பதைப் பின்வரும் ஹதீஸ்களில் இருந்தும் நாம் அறியலாம்.

**حدثنا سليمان بن داود الطيالسي حدثني داود بن إبراهيم الواسطي حدثني حبيب بن سالم عن النعمان بن بشير قال كنا قعودا في المسجد مع رسول الله صلى الله عليه وسلم وكان بشير رجلا يكف حديثه فجاء أبو ثعلبة الخشني فقال يا بشير بن سعد أتحفظ حديث رسول الله صلى الله عليه وسلم في الأمراء فقال حذيفة أنا أحفظ خطبته فجلس أبو ثعلبة فقال حذيفة قال رسول الله صلى الله عليه وسلم تكون النبوة فيكم ما شاء الله أن تكون ثم يرفعها إذا شاء أن يرفعها ثم تكون خلافة على منهاج النبوة فتكون ما شاء الله أن تكون ثم يرفعها إذا شاء الله أن يرفعها ثم تكون ملكا عاضا**

فيكون ما شاء الله أن يكون ثم يرفعها إذا شاء أن يرفعها ثم تكون ملكا جبرية فتكون ما شاء الله أن تكون ثم يرفعها إذا شاء أن يرفعها ثم تكون خلافة على منهاج النبوة ثم سكت قال حبيب فلما قام عمر بن عبد العزيز وكان يزيد بن النعمان بن بشير في صحابته فكتبت إليه بهذا الحديث أذكره إياه فقلت له إني أرجو أن يكون أمير المؤمنين يعني عمر بعد الملك العاض والجبرية فأدخل كتابي على عمر بن عبد العزيز فسر به وأعجبه

அமீர்கள் தொடர்பாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஹதீஸை மனனம் செய்திருக்கின்றீரா? என்று அபூ ஸஃலபா கேட்டார். நான் நபியவர்களின் சொற்பொழிவை மனனம் செய்துள்ளேன் என்று கூறி ஹுதைபா (ரலி) அவர்கள் பின் வருமாறு கூறினார்கள்.

நபித்துவம் எவ்வளவு காலம் இருக்க வேண்டும் என அல்லாஹ் நாடியுள்ளானோ அந்த அளவு நபித்துவம் இருக்கும். பிறகு அல்லாஹ் நாடும் போது உயர்த்த வேண்டிய தருனத்தில் அதை உயர்த்தி விடுவான். பிறகு நபித்துவத்தின் வழியில் கிலாஃபத் ஆட்சி அமையும். அல்லாஹ் எந்த அளவுக்கு நாடியுள்ளானோ அந்த அளவு அது நீடிக்கும். பிறகு அல்லாஹ் நாடும் போது உயர்த்த வேண்டிய தருனத்தில் அதை உயர்த்தி விடுவான். பிறகு கடினமான மன்னராட்சி அமையும். அல்லாஹ் எந்த அளவுக்கு நாடியுள்ளானோ அந்த அளவுக்கு நீடிக்கும். பிறகு அல்லாஹ் நாடும் போது உயர்த்த வேண்டிய தருனத்தில் அதை உயர்த்தி விடுவான். பின்னர் அடக்குமுறையைக் கொண்ட மன்னராட்சி அமையும். அல்லாஹ் எந்தளவுக்கு நாடியுள்ளானோ அந்த அளவுக்கு அது நீடிக்கும். பிறகு அல்லாஹ் நாடும் போது உயர்த்த வேண்டிய தருனத்தில் அதை உயர்த்தி விடுவான். பிறகு நபித்துவ வழியில் கிலாஃபத் ஆட்சி அமையும் என்று நபியவர்கள் கூறி முடித்து அமைதியாகி விட்டார்கள்.

நூல் : அஹ்மத் 17680

இந்த ஹதீஸில் ஆட்சி முறையைப் பற்றி நபியவர்கள் அடுக்கடுக்காகச் சொல்கிறார்கள் எனினும் தன்னுடைய ஆட்சி முறையைப் பற்றிக் குறிப்பிடும் போது, நபித்துவம் இருக்கும் என்றே குறிப்பிடுகின்றார்கள். எனவே அல்லாஹ்வின் திருத்தூதர் என்ற பெயரைத் தவிர வேறு ஆட்சி முறைகளைக் குறிப்பிடும் எந்த அடை மொழியிலும் நபியவர்களை அழைப்பது சரியல்ல என்பதை இதில் இருந்து உணரலாம்.

இவ்வாறு ரிஸாலத்தை (அல்லாஹ்வின் தூதர் எனும் தகுதியை) அடிப்படையாகக் கொண்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மாத்திரம் ஆட்சி செலுத்தவில்லை. இஸ்ரவேல் மக்களையும் நபிமார்கள் இப்படித் தான் ஆட்சி செலுத்தியுள்ளனர்.

**حدثني محمد بن بشار حدثنا محمد بن جعفر حدثنا شعبة عن فرات القزاز قال سمعت أبا حازم قال قاعدت أبا هريرة خمس سنين فسمعته يحدث عن النبي صلى الله عليه وسلم قال كانت بنو إسرائيل تسوسهم الأنبياء كلما هلك نبي خلفه نبي وإنه لا نبي بعدي وسيكون خلفاء فيكثرون قالوا فما تأمرنا قال فوا ببيعة الأول فالأول أعطوهم حقهم فإن الله سائلهم عما استرعاهم**

இஸ்ரவேலர்களை நபிமார்களே ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தனர். ஒரு நபி மறைந்ததும் இன்னொரு நபி அவருக்குப் பதிலாக பொறுப்பு வகிப்பார். எனக்குப் பிறகு எந்த நபியும் கிடையாது. கலீஃபாக்கள் உருவாவார்கள். ஆனால் அவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும் என்று நபியவர்கள் கூறியதும், அல்லாஹ்வின் தூதரே! (அது தொடர்பாக) எங்களுக்கு என்ன கட்டளையிடப் போகிறீர்கள் எனக் கேட்டனர். அதற்கு நபியவர்கள், அவர்களில் முதலில் யாரிடத்தில் உடன்படிக்கை செய்தீர்களோ அவரிடத்திலேயே அதை நிறைவேற்றுங்கள். அவர்களுடைய கடமையை அவர்களுக்குச் செலுத்தி விடுங்கள். நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் நிர்வகித்தவை பற்றி அவர்களிடம் விசாரனை செய்வான் என்று பதில் சொன்னார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி 3455

இவ்விரு ஹதீஸ்களும் ரிஸாலத் (அல்லாஹ்வின் தூதர் எனும் தகுதி) என்பதில் ஸியாஸத் (அரசியல் தலைமை)யும் அடங்கும் என்பதற்குத் தெளிவான சான்றுகளாக உள்ளன.

## கிலாஃபத்

அல்லாஹ்வின் தூதருக்குப் பிறகு அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆட்சிக்கு வந்தார்கள். ஆட்சித் தலைவரைக் குறிக்க பல்வேறு வார்த்தைகள் உள்ளன என்பதை முன்னர் நாம் குறிப்பிட்டுள்ளோம். அவற்றுள் எந்த ஒன்றையும் அபூபக்ர் (ரலி) அவர்கள் தமக்காகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. கலீஃபத்து ரஸூலில்லாஹ் - அல்லாஹ்வின் தூதருடைய பிரதிநிதி என்பதைத் தான் அவர்கள் பயன்படுத்தினார்கள். நபித்தோழர்களும் அவர்களை கலீஃபத்து ரஸூலில்லாஹ் என்று தான் அழைத்தனர்.

கலீஃபா என்ற சொல்லுக்கு அதிபர் என்ற பொருள் கிடையாது. பிரதிநிதி என்பதே அதன் நேரடிப் பொருளாகும். கலீஃபத்து ரஸூலில்லாஹ் என்றால் அல்லாஹ்வின் தூதருடைய பிரதிநிதி என்ற பொருள் வரும். பின்னர் கலீஃபத்து ரஸூலில்லாஹ் என்பது கலீஃபா என்று சுருங்கியது.

மன்னர், அதிபதி என்று பொருள் படும் மலிக், சுல்த்தான் போன்ற வார்த்தைகளைத் தவிர்த்து விட்டு நபியவர்களின் பிரதிநிதி எனப் பொருள்படும் கலீஃபா என்ற வார்த்தையையே அவர்கள் விரும்பினார்கள். அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களும் தன்னுடைய வழியில் நடக்கும் ஆட்சியை கிலாஃபத் எனவும், அத்தகைய ஆட்சியாளர்களைக் கலீஃபாக்கள் என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

முன்னர் நாம் எடுத்துக் காட்டிய ஹதீஸில் நபியவர்கள் பயன்படுத்திய நபித்துவத்தின் வழியில் கிலாஃபத் ஆட்சி அமையும் என்ற வாசகத்தில் இருந்து இதை நாம் அறியலாம்.

பின்வரும் ஹதீஸிலும் நபிவழியில் நடத்தப்படும் நல்லாட்சி கிலாஃபத் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**حدثنا علي بن حجر حدثنا بقية بن الوليد عن بحير بن سعد عن خالد بن معدان عن عبد الرحمن بن عمرو السلمي عن العرباض بن سارية قال وعظنا رسول الله صلى الله عليه وسلم يوما بعد صلاة الغداة موعظة بليغة ذرفت منها العيون ووجلت منها القلوب فقال رجل إن هذه موعظة مودع فماذا تعهد إلينا يا رسول الله قال أوصيكم بتقوى الله والسمع والطاعة وإن عبد حبشي فإنه من يعش منكم يرى اختلافا كثيرا وإياكم ومحدثات الأمور فإنها ضلالة فمن أدرك ذلك منكم فعليه بسنتي وسنة الخلفاء الراشدين المهديين عضوا عليها بالنواجذ قال أبو عيسى هذا حديث حسن**

صحيح وقد روى ثور بن يزيد عن خالد بن معدان عن عبد الرحمن بن عمرو السلمي عن العرباض بن سارية عن النبي صلى الله عليه وسلم نحو هذا حدثنا بذلك الحسن بن علي الخلال وغير واحد قالوا حدثنا أبو عاصم عن ثور بن يزيد عن خالد بن معدان عن عبد الرحمن بن عمرو السلمي عن العرباض بن سارية عن النبي صلى الله عليه وسلم نحوه والعرباض بن سارية يكنى أبا نجيح وقد روي هذا الحديث عن حجر بن حجر عن عرباض بن سارية عن النبي صلى الله عليه وسلم نحوه

அல்லாஹ்வுக்கு அஞ்சும்படியும், அமீர் கருத்த அடிமையாக இருந்தாலும் சரி அவருக்குச் செவிசாய்த்துக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்றும் நான் உங்களுக்கு அறிவுரை சொல்கிறேன். ஏனெனில் எனக்குப் பின் உங்களில் வாழ்பவர்கள் அதிகம் கருத்து வேறுபாடுகளைக் காண்பார்கள். அப்போது நீங்கள் என்னுடையை வழிமுறையையும், நேர்வழி பெற்ற நேர்மையான கலீஃபாக்களின் வழிமுறைகளையும் பின்பற்றுங்கள். அதைப் பற்றிப் பிடித்து கடைவாய்ப் பற்களால் கடித்துக் கொள்ளுங்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : இர்ஃபாள் பின் ஸாரியா (ரலி)

நூல் : திர்மிதி 3600

தனக்குப் பின் வரக்கூடிய, தன்னுடைய வழியில் நடக்கக் கூடிய ஆட்சியாளர்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலீஃபாக்கள் என்று இந்த ஹதீஸிலும் குறிப்பிடுகிறார்கள்.

حدثنا موسى بن داود حدثنا نافع يعني ابن عمر عن ابن أبي مليكة قال قيل لأبي بكر رضي الله عنه يا خليفة الله فقال أنا خليفة رسول الله صلى الله عليه وسلم وأنا راض به وأنا راض به وأنا راض

அல்லாஹ்வுடைய கலீஃபாவே என்று அபூபக்ர் (ரலி) அவர்களை நோக்கிக் கூறப்பட்டது. அப்போது அவர்கள் நான் அல்லாஹ்வின் தூதருடைய கலீஃபா ஆவேன். (அல்லாஹ்வின் கலீஃபா அல்ல) இவ்வாறு அழைப்பதையே நான் விரும்புகிறேன், இவ்வாறு அழைப்பதையே நான் விரும்புகிறேன், இவ்வாறு அழைப்பதையே நான் விரும்புகிறேன் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ முலைக்கா

நூல் : அஹ்மத் 56

மேற்கண்ட ஹதீஸ்களில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பிறகு நபித்துவத்தின் அடிப்படையில் நடக்கும் ஆட்சிக்கு கிலாஃபத் என்றும், அந்த

அடிப்படையில் ஆட்சி நடத்துபவர்கள் கலீஃபா என்றும் கூறப்பட்டிருப்பதைக் கானலாம்.

## இமாம் - இமாமத்

நல்ல முறையில் ஆட்சி நடத்தினாலும் அது அல்லாத முறையில் ஆட்சி நடத்தினாலும் அவர்களைக் குறிப்பிட இமாம் என்ற வார்த்தையும் பயன்படுத்தப்படுவதுண்டு.

இமாம் என்பது தொழுகை நடத்தக் கூடியவரைக் குறிக்கும் என்பதை நாம் அறிவோம். முழுமையான அதிகாரம் பெற்ற மன்னரையும் இவ்வார்த்தை குறிக்கும்.

நபியவர்கள் இமாம் என்ற வார்த்தையை இவ்விரு அர்த்தங்களிலும் பயன்படுத்தியுள்ளனர். உதாரணத்துக்கு புகாரியில் இடம் பெற்ற கீழ்க்காணும் ஹதீஸ்களைக் குறிப்பிடலாம்.

378, 651, 691, 688, 689, 691, 722, 732, 733, 734, 780, 782, 796, 805, 881, 883, 910, 912, 915, 929, 934, 1113, 1114, 1170, 1236, 3211, 3228, 4475, 5658, ஆகிய ஹதீஸ்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இமாம் என்ற சொல்லை தொழுகை நடத்துபவர் என்ற பொருளில் பயன்படுத்தியுள்ளனர்.

இமாம் என்ற வார்த்தையை அதிபர் என்ற பொருள் தரும் வகையில் பின்வரும் ஹதீஸ்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**وبهذا الإسناد من أطاعني فقد أطاع الله ومن عصاني فقد عصى الله ومن يطع الأمير فقد أطاعني ومن يعص الأمير فقد عصاني وإنما الإمام جنة يقاتل من ورائه ويتقى به فإن أمر بتقوى الله وعدل فإن له بذلك أجرا وإن قال بغيره فإن عليه منه**

இமாம் என்பவர் ஒரு கேடயமாவார்! அவருக்குப் பின்னால் நின்று மக்கள் போராடுவார்கள். அவரையே மக்கள் அரணாக ஆக்கிக் கொள்வார்கள். அவர் அல்லாஹ்வின் அச்சத்தை ஏவி, நீதமாக நடந்தால் அதற்குரிய கூலி அவருக்குக் கிடைத்து விடும். அதற்கு மாறானதை அவர் சொன்னால் அந்தப் பாவத்தில் அவருக்குப் பங்கு கிடைக்கும் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி 2957

இமாம் என்பவர் கேடயமாக இருப்பார்; அவருக்குப் பின்னால் நின்று போர் புரிய வேண்டும் என்ற சொற்கள் ஆட்சியும் அதிகாரமும் உள்ளவர் தான் இமாம் என்பதைச் சந்தேகத்துக்கு இடமில்லாத வகையில் கூறுகிறது.

**حدثنا محمد بن بشار بندار قال حدثنا يحيى عن عبيد الله قال حدثني خبيب بن عبد الرحمن عن حفص بن عاصم عن أبي هريرة عن النبي صلى الله عليه وسلم قال سبعة يظلهم الله في ظله يوم لا ظل إلا ظله الإمام العادل وشاب نشأ في عبادة ربه ورجل قلبه معلق في المساجد ورجلان تحابا في الله اجتمعا عليه وتفرقا عليه ورجل طلبته امرأة ذات منصب وجمال فقال إني أخاف الله ورجل تصدق أخفى حتى لا تعلم شماله ما تنفق يمينه ورجل ذكر الله خاليا ففاضت عيناه**

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: தனது நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத (நியாயத் தீர்ப்பு) நாளில் அல்லாஹ் தனது நிழலில் ஏழு பேருக்கு மட்டும் நிழல் கொடுப்பான். அவர்கள் நீதி மிக்க அரசன், அல்லாஹ்வின் வணக்கத்தில் திளைத்திருக்கும் இளைஞன், பள்ளிவாசல்களுடன் பிணைக்கப்பட்ட இதயத்தை உடையவன், அல்லாஹ்வுக்காகவே நேசித்து அவனுக்காகவே பிரிந்த இருவர், அழகும் அந்தஸ்தும் உள்ள ஒரு பெண் அழைத்த போது நான் அல்லாஹ்வுக்குப் பயப்படுகிறேன் எனக் கூறியவன், தனது இடது கரத்துக்குத் தெரியாமல் வலது கரத்தால் தர்மம் செய்தவன், தனித்திருந்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்து (அவனது அச்சத்தால்) கண்ணீர் வடித்தவன் ஆகியோர் ஆவர்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி 660, 1423, 6806

இந்த ஹதீஸில் நீதி மிக்க அரசன் என்பதற்கு இமாம் என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

893, 2358, 2409, 2558, 2751, 3449, 3606, 5188, 7084, 7138, 7212, ஆகிய ஹதீஸ்களிலும் இமாம் என்ற சொல்லை ஆட்சி செலுத்தும் தலைவர் என்ற பொருளில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

திருக்குர்ஆனை ஆய்வு செய்கையில் இமாம் என்ற வார்த்தை வழிகாட்டி, பிரமுகர் என்ற அர்த்தத்திலும் இடம் பெற்றுள்ளது.

நிராகரிப்பவர்களின் இமாம்களுடன் போர் செய்யுங்கள்.

திருக்குர்ஆன் 9:12

(இப்ராஹீமே!) நான் உம்மை மக்களுக்கு இமாமாக ஆக்குகின்றேன் என்று கூறினான்.

திருக்குர்ஆன் 2:124

இன்னும் நம் கட்டளைகளைக் கொண்டு (மக்களுக்கு) நேர்வழி காட்டும் இமாம்களாக நாம் அவர்களை ஆக்கினோம்.

திருக்குர்ஆன் 21:73

மேலும் அவர்கள் எங்கள் இறைவா! எங்கள் மனைவியரிடமும், எங்கள் சந்ததியினரிடமுமிருந்து எங்களுக்கு கண்குளிர்ச்சியை அளிப்பாயாக! இன்னும் பயபக்தியுடையவர்களுக்கு எங்களை இமாமாக ஆக்கியருள்வாயாக! என்று பிரார்த்தனை செய்வார்கள்.

திருக்குர்ஆன் 26:74

மேற்கண்ட வசனங்களிலும், இன்னும் இது போன்ற வசனங்களிலும் இமாம் என்ற வார்த்தை வழிகாட்டி, பிரமுகர் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம்.

### சுல்த்தான்

மன்னருக்கு இமாம் என்ற வார்த்தை பயன்படுத்தப்படுவது போல் சுல்த்தான் என்ற வார்த்தையும் மன்னரைக் குறிக்க பயன்படுத்தப்பட்டுள்ளது.

**حدثنا مسدد حدثنا عبد الوارث عن الجعد عن أبي رجاء عن ابن عباس عن النبي صلى الله عليه وسلم قال من كره من أميره شيئا فليصبر فإنه من خرج من السلطان شبرا مات ميتة جاهلية**

ஒருவர் தனது ஆட்சியாளரிடம் எதையேனும் கண்டு வெறுப்படைவாரானால் அவர் சகித்துக் கொள்வாராக! ஏனெனில் ஒருவர் சுல்த்தானை ஆட்சியாளரை விட்டு ஒரு ஜாண் அளவு வெளியேறினால் அவர் அறியாமைக் கால மரணத்தைத் தழுவுவார் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : புகாரி 7053

இந்த ஹதீஸில் ஆட்சியாளர் என்பதற்கு சுல்த்தான் என்ற வாசகம் இடம் பெறுகின்றது.

## மலிக்

மன்னரைக் குறிக்க நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மலிக் என்ற சொல்லையும் பயன்படுத்தியுள்ளனர்.

**حدثنا سليمان بن داود الطيالسي حدثني داود بن إبراهيم الواسطي حدثني حبيب بن سالم عن النعمان بن بشير قال كنا قعودا في المسجد مع رسول الله صلى الله عليه وسلم وكان بشير رجلا يكف حديثه فجاء أبو ثعلبة الخشني فقال يا بشير بن سعد أتحفظ حديث رسول الله صلى الله عليه وسلم في الأمراء فقال حذيفة أنا أحفظ خطبته فجلس أبو ثعلبة فقال حذيفة قال رسول الله صلى الله عليه وسلم تكون النبوة فيكم ما شاء الله أن تكون ثم يرفعها إذا شاء أن يرفعها ثم تكون خلافة على منهاج النبوة فتكون ما شاء الله أن تكون ثم يرفعها إذا شاء الله أن يرفعها ثم تكون ملكا عاضا فيكون ما شاء الله أن يكون ثم يرفعها إذا شاء أن يرفعها ثم تكون ملكا جبرية فتكون ما شاء الله أن تكون ثم يرفعها إذا شاء أن يرفعها ثم تكون خلافة على منهاج النبوة ثم سكت قال حبيب فلما قام عمر بن عبد العزيز وكان يزيد بن النعمان بن بشير في صحابته فكتبت إليه بهذا الحديث أذكره إياه فقلت له إني أرجو أن يكون أمير المؤمنين يعني عمر بعد الملك العاض والجبرية فأدخل كتابي على عمر بن عبد العزيز فسر به وأعجبه**

அமீர்கள் தொடர்பாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஹதீஸை மனனம் செய்திருக்கின்றீரா? என்று அபூ ஸஃலபா கேட்டார். நான் நபியவர்களின் சொற்பொழிவை மனனம் செய்துள்ளேன் என்று கூறி ஹுதைபா (ரலி) அவர்கள் பின் வருமாறு கூறினார்கள்.

நபித்துவம் எவ்வளவு காலம் இருக்க வேண்டும் என அல்லாஹ் நாடியுள்ளானோ அந்த அளவு நபித்துவம் இருக்கும். பிறகு அல்லாஹ் நாடும் போது உயர்த்த வேண்டிய தருனத்தில் அதை உயர்த்தி விடுவான். பிறகு நபித்துவத்தின் வழியில் கிலாஃபத் ஆட்சி அமையும். அல்லாஹ் எந்த அளவுக்கு நாடியுள்ளானோ அந்த அளவு அது நீடிக்கும். பிறகு அல்லாஹ் நாடும் போது உயர்த்த வேண்டிய தருனத்தில் அதை உயர்த்தி விடுவான். பிறகு கடினமான மன்னராட்சி அமையும். அல்லாஹ் எந்த அளவுக்கு நாடியுள்ளானோ அந்த அளவுக்கு நீடிக்கும். பிறகு அல்லாஹ் நாடும் போது உயர்த்த வேண்டிய தருனத்தில் அதை உயர்த்தி விடுவான். பின்னர் அடக்கு முறையைக் கொண்ட மன்னராட்சி அமையும். அல்லாஹ் எந்தளவுக்கு நாடியுள்ளானோ அந்த அளவுக்கு அது நீடிக்கும். பிறகு அல்லாஹ் நாடும் போது உயர்த்த வேண்டிய தருனத்தில் அதை உயர்த்தி விடுவான். பிறகு நபித்துவ வழியில் கிலாஃபத் ஆட்சி அமையும் என்று நபியவர்கள் கூறி முடித்து அமைதியாகி விட்டார்கள்.

நூல் : அஹ்மத் 17680.

இந்த ஹதீஸில் மன்னராட்சி என்பதை மலிக் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

## அமீருல் ஆம்மா - பொது அமீர்

மன்னரைக் குறிப்பிட அமீர் என்ற வார்த்தையுடன் ஆம்மா என்பதைச் சேர்த்து அமீர் ஆம்மா (பொது அமீர்) எனவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**حدثنا زهير بن حرب حدثنا عبد الصمد بن عبد الوارث حدثنا المستمر بن الريان حدثنا أبو نضرة عن أبي سعيد قال قال رسول الله صلى الله عليه وسلم لكل غادر لواء يوم القيامة يرفع له بقدر غدره ألا ولا غادر أعظم غدرا من أمير عامة**

மறுமை நாளில் ஒவ்வொரு ஏமாற்றுக்காரனுக்கும் ஒரு கொடி உண்டு. அவன் ஏமாற்றிய அளவுக்கு அது அவனுக்கு உயர்த்திக் காட்டப்படும். அறிந்து கொள்ளுங்கள். (மோசடி செய்யும்) அமீருல் ஆம்மாவை (அரசனை) விட மிகப் பெரிய ஏமாற்றுக்காரன் வேறு யாரும் இருக்க முடியாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஸயீதுல் குத்ரி (ரலி)

நூல் : முஸ்லிம்

இந்த ஹதீஸில் ஆட்சியாளருக்கு அமீருல் ஆம்மா எனக் கூறப்படுகிறது. அமீருல் ஆம்மா என்ற சொல்லுக்கு பொது அமீர் என்பது பொருள்.

சின்ன சின்ன அதிகாரம் படைத்தவர்கள் அமீர் என்றும் அனைத்து அமீர்களுக்கும் மேலே உள்ள அதிபர் - முழு அதிகாரம் படைத்தவர், அமீருல் ஆம்மா - பொது அமீர் என்றும் குறிப்பிடப்படுவர். இவருக்குக் கீழ் பல அமீர்கள் இருப்பார்கள்; ஆனால் இவருக்கு மேல் எந்த அமீரும் இருக்க மாட்டார் என்பதால் பொது அமீர் என்ற சொல்லால் இவர் குறிப்பிடப்படுகிறார்.

எனினும் இமாம், சுல்த்தான், அமீருல் ஆம்மா ஆகியவர்களுக்கும், கலீஃபாக்களுக்கும் இடையில் ஒரு முக்கியமான வித்தியாசம் உள்ளது.

அதாவது கலீஃபாக்கள் நபித்துவ வழியில் ஆட்சி நடத்தக் கூடியவர்கள் என்பதாகும். இமாம், சுல்த்தான், மலிக், அமீருல் ஆம்மா ஆகிய சொற்களின் பொருள் பொதுவாக ஆட்சி செலுத்துபவர்கள் - அரசர்கள் என்பதாகும்.

நபிவழியில் ஆட்சி செய்யாவிட்டாலும் இந்தச் சொற்களைப் பயன்படுத்தலாம். ஆனால் கலீஃபா என்ற சொல்லை நபிவழியில் ஆட்சி செலுத்துபவர்களுக்கு மட்டும் தான் பயன்படுத்த வேண்டும்.

## அமீருல் முஃமினீன்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி) அவர்களும் அமீர் என்று அழைக்கப்படவில்லை என்பதை முன்னர் பார்த்தோம். அபூபக்ர் (ரலி) அவர்களுக்குப் பின்னால் வந்த ஆட்சியாளர்களான உமர் (ரலி), உஸ்மான் (ரலி), அலி (ரலி) ஆகியோரும் தம்மை அமீர் என்று கூறிக் கொள்ளவில்லை. மக்களும் அவர்களை அமீர் என்று அழைக்கவில்லை.

அவர்கள் அனைவரும் நபித்துவத்தின் அடிப்படையில் ஆட்சி நடத்தியதால் கலீஃபாக்கள் என்றே அழைக்கப்பட்டனர். உமர் (ரலி) அவர்களின் கால கட்டத்தில் தான் அமீருல் மூமினீன் (இறை நம்பிக்கையாளர்களின் தலைவர்) என்று அழைக்கும் மரபு ஆரம்பமாகியது.

உமர் (ரலி) அவர்கள் கலீஃபாவாக இருந்த போது அமீருல் மூமினீன் எனவும் அழைக்கப்பட்டனர். அவர்களைத் தொடர்ந்து ஆட்சி நடத்திய ஏனைய கலீஃபாக்களும் சில நேரங்களில் அமீருல் மூமினீன் என்று குறிப்பிடப்பட்டனர்.

அமீருல் மூமினீன் என்பதில் அமீர் என்ற ஒரு சொல்லும் மூமினீன் என்ற ஒரு சொல்லும் உள்ளன. எந்தக் கலீஃபாவும் அமீர் என்று மட்டும் குறிப்பிடப்படவில்லை. அனைத்து மூமின்களின் தலைவர் என்ற விரிந்த பொருளுடைய அமீருல் மூமினீன் என்ற சொற்றொடரால் தான் அவர்கள் அழைக்கப்பட்டனர் என்பது கவனிக்கத் தக்கது.

அனைத்து மூமின்களுக்குமான ஒரே தலைவர் என்ற கருத்துப்பட அமீருல் மூமினீன் என்ற சொற்றொடர் அமைந்துள்ளது. இதில் இருந்து இவருக்குக் கீழ் சிறு அதிகாரம் வழங்கப்பட்ட அமீர்கள் பலர் இருப்பார்கள் என்ற கருத்து அடங்கியுள்ளது. அதனால் தான் அமீர் என்று மட்டும் சொல்லப்படாமல் மூமின்கள் அனைவருக்குமான அதிபர் என்று அவர்கள் அழைக்கப்பட்டனர்.

## அமீர்

தலைமைப் பதவி வகிப்பவர்களுக்குப் பயன்படுத்தப்படும் சொற்கள் குறித்து நாம் இது வரை அறிந்தோம். இனி அமீர் என்ற சொல் யாரைக் குறிக்கும் என்பதைப் பார்ப்போம்.

முதலில் இந்தச் சொல்லின் நேரடிப் பொருள் என்ன என்று பார்ப்போம். அம்ரு என்ற வேர்ச்சொல்லில் இருந்து பிறந்ததே அமீர் எனும் சொல். அம்ர் என்றால் உத்தரவு போடுதல், கட்டளையிடுதல் என்பது பொருளாகும். அமீர் என்றால் கட்டளையிடுபவர், உத்தரவு இடுபவர் என்பது இதன் நேரடிப் பொருளாகும்.

ஒருவரிடம் ஒன்றைச் செய்யுமாறு சாதாரணமாகக் கூறுவதற்கும், கட்டளையிடுவதற்கும் உள்ள வித்தியாசம் நாம் அறிந்தது தான்.

ஒன்றைச் செய்யுமாறு நாம் ஒருவரிடம் கூறினால் அவர் விரும்பினால் அதைச் செய்வார். விரும்பாவிட்டால் செய்ய மறுப்பார். அவரை நம்மால் ஒன்றும் செய்ய முடியாது.

ஒருவர் கட்டளை இடுகிறார் என்றால் அதை நாம் செய்தே ஆக வேண்டும். செய்யத் தவறினால் அவர் நம்மைத் தண்டிப்பார். அதற்கான அதிகாரம் அவரிடம் இருக்கும். வேறு வார்த்தையில் இதைச் சொல்வதாக இருந்தால் யாரிடம் தண்டிக்கும் அதிகாரமும், கட்டாயப்படுத்தும் அதிகாரமும் உள்ளதோ அவர் தான் கட்டளை இட முடியும். எவ்வித அதிகாரமும் இல்லாதவர் கட்டளை பிறப்பிக்க முடியாது.

அமீர் என்று ஒருவரைப் பற்றி கூற வேண்டுமானால் அவர் அதிகாரம் உடையவராக இருக்க வேண்டும். தனது கட்டளையை மீறக் கூடியவரை அவர் தண்டிக்க நினைத்தால் தண்டிக்க சக்தி இருக்க வேண்டும்.

அரபு மொழியில் எத்தனையோ சொற்களின் பொருள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் இருந்த பொருளில் இருந்து மாறிவிட்டன. ஆனால் அமீர் என்ற சொல் அன்று முதல் இன்று வரை அதிகாரம் உடையவர் என்ற பொருளில் தான் அரபு நாடுகளில் பயன்படுத்தப்படுகின்றன.

அமைச்சர்கள், ஆளுனர்கள் போன்றவர்களே அங்கே அமீர் என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிறார்கள்.

அமீர் என்ற சொல்லே நமக்குத் தேவையான விளக்கத்தை அளித்து விடுகிறது.

ஆனால் இன்று ஜமாஅத்தே இஸ்லாமி அமீர், ஜாக் அமீர், அஹ்லே ஹதீஸ் அமீர், இரகசிய இயக்க அமீர் ஆகியோருக்கு துரும்பு அளவுக்குக் கூட அதிகாரம் இல்லை. அவர்களுக்குக் கட்டுப்பட மறுத்தால் அவர்கள் நம்மைச் சிறையில் தள்ள முடியாது. இன்னும் சொல்லப் போனால் இவர்களே மற்றவர்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கும் நிலையில் இருக்கிறார்கள். இதில் இருந்து அமீருக்குக் கட்டுப்படுதல் என்பதை வைத்து இவர்கள் மோசடி செய்கிறார்கள் என்பது உறுதியாகிறது.

அரபு மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களிடம் இவர்களை அமீர் என்று அறிமுகப்படுத்தினால் கலெக்டர் என்று தான் புரிந்து கொள்வார்கள். மடாதிபதிகளைப் போன்ற தலைவர் என்று புரிந்து கொள்ள மாட்டார்கள்.

இவர்களில் பலர் அரபு நாடுகளிடம் நிதி உதவி கேட்டு கடிதம் எழுதுகிறார்கள். அந்தக் கடிதங்களைப் பார்த்தால் இவர்களின் சாயம் வெளுத்து விடும்.

உதாரணமாக அந்தக் கடிதங்களில் ஜாக் அமீர் என்று தங்களைக் குறிப்பிட மாட்டார்கள். ஜாக் ரயீஸ் என்றே குறிப்பிட்டிருப்பார்கள். அமீர் என்று கூறினால் அரபுகள் கைகொட்டி சிரிப்பார்கள் என்பதால் இப்படி இரட்டை வேடம் போடுகிறார்கள். அரபு அல்லாதவர்கள் மத்தியில் அமீர் என்று கூறிக் கொள்ளும் இவர்கள் அரபு மக்களிடம் அமீர் என்று தங்களைக் கூறிக் கொள்ள மாட்டார்கள்.

அகராதி அடிப்படையில் மட்டும் இன்றி இஸ்லாத்தின் அடிப்படையிலும் அமீர் என்றால் அதிகாரம் உள்ளவர் தான்.

ஒரு நாட்டில் பல பகுதிகள் இருக்கும். அனைத்துப் பகுதியையும் ஒரே ஒருவர் நேரடியாக நிர்வாகம் செய்ய முடியாது. எனவே அதிபராக இருப்பவர் ஒவ்வொரு பகுதிக்கும் ஒருவரை அதிகாரியாக நியமித்து அவர் மூலம் தான் நிர்வாகம்

செய்ய முடியும். இப்படி அதிபரால் சில பகுதிகளை நிர்வாகம் செய்ய நியமிக்கப்பட்டவர்கள் தான் இஸ்லாத்தில் அமீர்கள் எனப்படுவார்கள்.

அது போல் ஒரு நாட்டில் ஏராளமான துறைகளை அதிபர் நிர்வாகம் செய்ய வேண்டும். அனைத்தையும் ஒரு அதிபரே செய்ய முடியாது. எனவே குறிப்பிட்ட பணியை அதிபரின் கட்டளைப்படி செய்து முடிக்கும் அதிகாரம் பெற்றவரும் அமீர் எனப்படுவார்.

எவ்வித அதிகாரமும் இல்லாமல் அதிபரால் நியமிக்கப்படாமல் பத்துப் பேர் கூடி ஒருவரை அமீர் என்று கூறிக் கொண்டால் அவர் இஸ்லாத்தில் அமீர் எனக் கூறப்பட மாட்டார்.

அதிபராக இருப்பவர் குறிப்பிட்ட பணிகளுக்காக அமீர் நியமித்தல்

**حدثنا عبيد الله بن موسى عن إسرائيل عن أبي إسحاق عن البراء رضي الله عنه قال لقينا المشركين يومئذ وأجلس النبي صلى الله عليه وسلم جيشا من الرماة وأمر عليهم عبد الله وقال لا تبرحوا إن رأيتمونا ظهرنا عليهم فلا تبرحوا وإن رأيتموهم ظهروا علينا فلا تعينونا فلما لقينا هربوا حتى رأيت النساء يشتددن في الجبل رفعن عن سوقهن قد بدت خلاخلهن فأخذوا يقولون الغنيمة الغنيمة فقال عبد الله عهد إلي النبي صلى الله عليه وسلم أن لا تبرحوا فأبوا فلما أبوا صرف وجوههم فأصيب سبعون قتيلا وأشرف أبو سفيان فقال أفي القوم محمد فقال لا تجيبوه فقال أفي القوم ابن أبي قحافة قال لا تجيبوه فقال أفي القوم ابن الخطاب فقال إن هؤلاء قتلوا فلو كانوا أحياء لأجابوا فلم يملك عمر نفسه فقال كذبت يا عدو الله أبقى الله عليك ما يخزيك قال أبو سفيان اعل هبل فقال النبي صلى الله عليه وسلم أجيبوه قالوا ما نقول قال قولوا الله أعلى وأجل قال أبو سفيان لنا العزى ولا عزى لكم فقال النبي صلى الله عليه وسلم أجيبوه قالوا ما نقول قال قولوا الله مولانا ولا مولى لكم قال أبو سفيان يوم بيوم بدر والحرب سجال وتجدون مثلة لم آمر بها ولم تسؤني**

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உஹதுப் போர் நாளன்று அப்துல்லாஹ் பின் ஜுபைரை அம்பெய்யும் வீரர்களுக்கு அமீராக நியமித்தார்கள்.

அறிவிப்பவர் : பராஃ (ரலி)

நூல் : புகாரி 4044

**الله عنهما قال أمر رسول الله صلى الله عليه وسلم في غزوة مؤتة زيد بن حارثة فقال رسول الله صلى الله عليه وسلم إن قتل زيد فجعفر وإن قتل جعفر فعبد الله بن رواحة قال عبد الله كنت فيهم في تلك الغزوة فالتمسنا جعفر بن أبي طالب فوجدناه في القتلى ووجدنا ما في جسده بضعا وتسعين من طعنة ورمية**

முஅத்தா போரின் போது ஸைத் பின் ஹாரிஸாவை அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அமீராக நியமித்தார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)

நூல் : புகாரி 4261

**حدثنا عبد الرحمن بن مهدي حدثنا الأسود بن شيبان عن خالد بن سمير قال قدم علينا عبد الله بن رباح الأنصاري وكانت الأنصار تفقهه فأتيته وهو في حواء شريك بن الأعور الشارع على المربد وقد اجتمع عليه ناس من الناس فقال حدثنا أبو قتادة الأنصاري فارس رسول الله صلى الله عليه وسلم قال بعث رسول الله صلى الله عليه وسلم جيش الأمراء فقال عليكم زيد بن حارثة فإن أصيب زيد فجعفر بن أبي طالب فإن أصيب جعفر فعبد الله بن رواحة الأنصاري فوثب جعفر فقال بأبي أنت وأمي يا رسول الله ما كنت أرهب أن تستعمل علي زيدا قال امضه فإنك لا تدري أي ذلك خير فانطلقوا فلبثوا ما شاء الله ثم إن رسول الله صلى الله عليه وسلم صعد المنبر وأمر أن ينادى الصلاة جامعة فقال رسول الله صلى الله عليه وسلم ناب خير أو بات خير أو ثاب خير شك عبد الرحمن ألا أخبركم عن جيشكم هذا الغازي إنهم انطلقوا فلقوا العدو فأصيب زيد شهيدا فاستغفروا له فاستغفر له الناس ثم أخذ اللواء جعفر بن أبي طالب فشد على القوم حتى قتل شهيدا أشهد له بالشهادة فاستغفروا له ثم أخذ اللواء عبد الله بن رواحة فأثبت قدميه حتى قتل شهيدا فاستغفروا له ثم أخذ اللواء خالد بن الوليد ولم يكن من الأمراء هو أمر نفسه ثم رفع رسول الله صلى الله عليه وسلم إصبعيه فقال اللهم هو سيف من سيوفك فانصره فمن يومئذ سمي خالد سيف الله ثم قال انفروا فأمدوا إخوانكم ولا يتخلفن أحد قال فنفر الناس في حر شديد مشاة وركبانا**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (போருக்காக) ஒரு படையை அனுப்பினார்கள். அவர்களுக்கு ஸைத் பின் ஹாரிஸாவை அமீராக நியமித்தார்கள். ஸைத் கொல்லப்பட்டு விட்டால் உங்கள் அமீர் ஜஃபர் ஆவார். அவர் கொல்லப்பட்டுவிட்டால் உங்களுடைய அமீர் அப்துல்லாஹ் பின் ரவாஹா ஆவார் என்று கூறி ஸைத் பின் ஹாரிஸாவை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அமீராக நியமித்தார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் ஜஃபர் (ரலி)

நூல் : அஹ்மத் 21523

**حدثنا أبو بكر بن أبي شيبة حدثنا وكيع بن الجراح عن سفيان ح و حدثنا إسحق بن إبراهيم أخبرنا يحيى بن آدم حدثنا سفيان قال أملاه علينا إملاء ح و حدثني عبد الله بن هاشم واللفظ له حدثني عبد الرحمن يعني ابن مهدي حدثنا سفيان عن علقمة بن مرثد عن سليمان بن بريدة عن أبيه قال كان رسول الله صلى الله عليه وسلم إذا أمر أميرا على جيش أو سرية أوصاه في خاصته بتقوى الله ومن معه من المسلمين خيرا**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இராணுவத்திற்கு, அல்லது ஒரு சிறு படைக்கு அமீரை நியமித்தால் தனிமையில் இருக்கும் போது அல்லாஹ்வை அஞ்சிக் கொள் என்று அறிவுரை வழங்குவார்கள்.

அறிவிப்பவர் : சுலைமான் பின் புரைதா (ரலி)

நூல் : முஸ்லிம் 3261

**حدثنا علي بن عبد الله حدثنا سفيان قال الذي حفظناه من عمرو بن دينار قال سمعت جابر بن عبد الله يقول بعثنا رسول الله صلى الله عليه وسلم ثلاث مائة راكب أميرنا أبو عبيدة بن الجراح نرصد عير قريش فأقمنا بالساحل نصف شهر فأصابنا جوع شديد حتى أكلنا الخبط فسمي ذلك الجيش جيش الخبط فألقى لنا البحر دابة يقال لها العنبر فأكلنا منه نصف شهر وادهنا من ودكه حتى ثابت إلينا أجسامنا فأخذ أبو عبيدة ضلعا من أضلاعه فنصبه فعمد إلى أطول رجل معه قال سفيان مرة ضلعا من أضلاعه فنصبه وأخذ رجلا وبعيرا فمر تحته قال جابر وكان رجل من القوم نحر ثلاث جزائر ثم نحر ثلاث جزائر ثم نحر ثلاث جزائر ثم إن أبا عبيدة نهاه وكان عمرو يقول أخبرنا أبو صالح أن قيس بن سعد قال لأبيه كنت في الجيش فجاعوا قال انحر قال نحرت قال ثم جاعوا قال انحر قال نحرت قال ثم جاعوا قال انحر قال نحرت ثم جاعوا قال انحر قال نهيت**

குறைஷிகளின் ஒட்டகக் கூட்டத்தை எதிர்பார்த்துத் தாக்குவதற்காக எங்களை நபியவர்கள் அனுப்பினார்கள். எங்கள் படையில் முன்னூறு குதிரை வீரர்கள் இருந்தார்கள். எங்களுடைய அமீராக அபூ உபைதா பின் அல் ஜர்ராஹ் இருந்தார்.

அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி)

நூல் :புகாரி 4361

**حدثنا يحيى بن يحيى قال قرأت على مالك عن نافع عن نبيه بن وهب أن عمر بن عبيد الله أراد أن يزوج طلحة بن عمر بنت شيبة بن جبير فأرسل إلى أبان بن عثمان يحضر ذلك وهو أمير الحج فقال أبان سمعت عثمان بن عفان يقول قال رسول الله صلى الله عليه وسلم لا ينكح المحرم ولا ينكح ولا يخطب**

உமர் பின் உபைதுல்லாஹ், ஷைபாவின் மகளை தல்ஹாவுக்கு நிக்காஹ் முடித்து வைக்க விரும்பினார். இதில் கலந்து கொள்வதற்காக அபான் பின் உஸ்மானுக்கு அழைப்பு அனுப்பியிருந்தார். அப்போது அவர் ஹஜ் விவகாரத் துறைக்கு அமீராக இருந்தார்.

அறிவிப்பவர் : நபீஹ் பின் வஹப்

நூல் :முஸ்லிம்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் நல்லாட்சி நடத்திய கலீஃபாக்களும் குறிப்பிட்ட பணிகளைச் செய்து முடிக்க அதிகாரம் கொடுத்து அமீர்களை நியமித்துள்ளார்கள் என்பதை மேற்கண்ட ஹதீஸ்களில் இருந்து அறியலாம்.

## குறிப்பிட்ட பகுதிகளுக்கு அமீர்களை நியமித்தல்

**حدثنا إسماعيل بن عبد الله قال حدثني إسماعيل بن إبراهيم بن عقبة عن موسى بن عقبة قال ابن شهاب حدثني عروة بن الزبير أن المسور بن مخرمة أخبره أن عمرو بن عوف وهو حليف لبني عامر بن لؤي كان شهد بدرا مع رسول الله صلى الله عليه وسلم أخبره أن رسول الله صلى الله عليه وسلم بعث أبا عبيدة بن الجراح إلى البحرين يأتي بجزيتها وكان رسول الله صلى الله عليه وسلم هو صالح أهل البحرين وأمر عليهم العلاء بن الحضرمي فقدم أبو عبيدة بمال من البحرين فسمعت الأنصار بقدومه فوافته صلاة الصبح مع رسول الله صلى الله عليه وسلم فلما انصرف تعرضوا له فتبسم رسول الله صلى الله عليه وسلم حين رآهم وقال أظنكم سمعتم بقدوم أبي عبيدة وأنه جاء بشيء قالوا أجل يا رسول الله قال فأبشروا وأملوا ما يسركم فوالله ما الفقر أخشى عليكم ولكن أخشى عليكم أن تبسط عليكم الدنيا كما بسطت على من كان قبلكم فتنافسوها كما تنافسوها وتلهيكم كما ألهتهم**

நபியவர்கள் பஹ்ரைன் நாட்டு மக்களிடம் உடன்படிக்கை செய்து அந்நாட்டு மக்களுக்கு அலா பின் அல் ஹழ்ரமியை அமீராக நியமனம் செய்தார்கள்.

அறிவிப்பவர் : அம்ரு பின் அல் அவ்ஃப் அல் அன்சாரி (ரலி)

நூல் : புகாரி 6425

**حدثنا يحيى حدثنا وكيع عن شعبة عن سعيد بن أبي بردة عن أبيه عن جده أن النبي صلى الله عليه وسلم بعث معاذا وأبا موسى إلى اليمن قال يسرا ولا تعسرا وبشرا ولا تنفرا وتطاوعا ولا تختلفا**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முஆதையும், அபூ மூஸாவையும் யமனுக்கு (அமீர்களாக) அனுப்பிய போது நீங்கள் இருவரும் நளினமாக நடங்கள்! கடுமையாக நடக்காதீர்கள். மக்களிடம் மகிழ்ச்சியை உருவாக்குங்கள். வெறுப்பை உருவாக்கி விடாதீர்கள். ஒருவர் இன்னொருவருக்கு இணங்கி நடங்கள்! கருத்து வேறுபாடு கொள்ளாதீர்கள் என்று அறிவுறுத்தினார்கள்.

அறிவிப்பவர் : அபூ புர்தா (ரலி)

நூல் : புகாரி 3038

**و حدثني سلمة بن شبيب حدثنا الحسن بن أعين حدثنا معقل عن زيد بن أبي أنيسة عن يحيى بن حصين عن جدته أم الحصين قال سمعتها تقول حججت مع رسول الله صلى الله عليه وسلم حجة الوداع فرأيته حين رمى جمرة العقبة وانصرف وهو على راحلته ومعه بلال وأسامة أحدهما يقود به راحلته والآخر رافع ثوبه على رأس رسول الله صلى الله عليه وسلم من الشمس قالت فقال رسول الله صلى الله عليه وسلم قولا كثيرا ثم سمعته يقول إن أمر عليكم عبد مجدع حسبتها قالت أسود يقودكم بكتاب الله تعالى فاسمعوا له وأطيعوا**

காய்ந்த திராட்சையைப் போன்ற தலையைக் கொண்ட அபீஸீனியர் உங்களுக்கு அமீராக நியமிக்கப்பட்டாலும் நீங்கள் செவிசாயுங்கள், கட்டுப்படுங்கள் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : முஸ்லிம்

**حدثنا أبو اليمان أخبرنا شعيب عن الزهري سمعت عروة بن الزبير يحدث عمر بن عبد العزيز في إمارته أخر المغيرة بن شعبة العصر وهو أمير الكوفة فدخل عليه أبو مسعود عقبة بن عمرو الأنصاري جد زيد بن حسن شهد بدرا فقال لقد علمت نزل جبريل فصلى فصلى رسول الله صلى الله عليه وسلم خمس صلوات ثم قال هكذا أمرت كذلك كان بشير بن أبي مسعود يحدث عن أبيه**

கூஃபாவின் அமீராக முகீரா இருக்கும் போது நான் பள்ளிக்கு வந்தேன்......என அலீ பின் ரபீஆ அறிவிக்கின்றார்.

நூல் : புகாரி 4007

**أخبرنا محمد بن المثنى قال حدثنا خالد وهو ابن الحارث قال حدثنا حميد عن الحسن قال قال ابن عباس وهو أمير البصرة في آخر الشهر أخرجوا زكاة صومكم فنظر الناس بعضهم إلى بعض فقال من هاهنا من أهل المدينة قوموا فعلموا إخوانكم فإنهم لا يعلمون أن هذه الزكاة فرضها رسول الله صلى الله عليه وسلم على كل ذكر وأنثى حر ومملوك صاعا من شعير أو تمر أو نصف صاع من قمح فقاموا خالفه هشام فقال عن محمد بن سيرين**

பஸராவுடைய அமீராக இருக்கும் போது இப்னு அப்பாஸ் அவர்கள் அறிவித்தார்கள்......

அறிவிப்பவர் : ஹஸன்

நூல் : நஸாயீ 2461

**قال حدثنا عبد الرازق أخبرنا داود بن قيس الصنعاني قال حدثني عبد الله بن وهب عن أبيه قال حدثني فنج قال كنت أعمل في الدينباذ وأعالج فيه فقدم يعلي بن أمية أميرا على اليمن وجاء معه رجال من أصحاب النبي صلى الله عليه وسلم فجاءني رجل ممن قدم معه وأنا في الزرع أصرف الماء في الزرع ومعه في كمه جوز فجلس على ساقية من الماء وهو يكسر من ذلك الجوز ويأكل ثم أشار إلى فنج فقال يا فارسي هلم قال فدنوت منه فقال الرجل لفنج أتضمن لي غرس هذا الجوز على الماء فقال له فنج ما ينفعني ذلك فقال الرجل سمعت رسول الله صلى الله عليه وسلم يقول بأذني هاتين من نصب شجرة فصبر على حفظها والقيام عليها حتى تثمر كان له في كل شيء يصاب من ثمرتها صدقة عند الله عز وجل فقال فنج أنت سمعت هذا من رسول الله صلى الله عليه وسلم قال نعم قال فنج فأنا أضمنها قال فمنها جوز الدينباذ**

ஏமனுக்கு அமீராக யஃலா பின் உமையா அவர்கள் வருகை தந்தார்கள். அவருடன் நபித் தோழர்களில் முக்கியமானவர்களும் வந்தார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் வஹப்

நூல் :அஹ்மத் 15991

**حدثنا شيبان بن فروخ حدثنا سليمان بن المغيرة حدثنا حميد بن هلال عن خالد بن عمير العدوي قال خطبنا عتبة بن غزوان فحمد الله وأثنى عليه ثم قال أما بعد فإن الدنيا قد آذنت بصرم وولت حذاء ولم يبق منها إلا صبابة كصبابة الإناء يتصابها صاحبها وإنكم منتقلون منها إلى دار لا زوال لها فانتقلوا بخير ما بحضرتكم فإنه قد ذكر لنا أن الحجر يلقى من شفة جهنم فيهوي فيها سبعين عاما لا يدرك لها قعرا و والله لتملأن أفعجبتم ولقد ذكر لنا أن ما بين مصراعين من مصاريع الجنة مسيرة أربعين سنة وليأتين عليها يوم وهو كظيظ من الزحام ولقد رأيتني سابع سبعة مع رسول الله صلى الله عليه وسلم ما لنا طعام إلا ورق الشجر حتى قرحت أشداقنا فالتقطت بردة فشققتها بيني وبين سعد بن مالك فاتزرت بنصفها واتزر سعد بنصفها فما أصبح اليوم منا أحد إلا أصبح أميرا على مصر من الأمصار وإني أعوذ بالله أن أكون في نفسي عظيما وعند الله صغيرا وإنها لم تكن نبوة قط إلا تناسخت حتى يكون آخر عاقبتها ملكا فستخبرون وتجربون الأمراء بعدنا و حدثني إسحق بن عمر بن سليط حدثنا سليمان بن المغيرة حدثنا حميد بن هلال عن خالد بن عمير وقد أدرك الجاهلية قال خطب عتبة بن غزوان وكان أميرا على البصرة فذكر نحو حديث شيبان**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் (இஸ்லாத்தின் துவக்க காலத்தில்) இருந்த ஏழு பேரில் நானும் ஒருவன். எங்களுக்கு இலை, தழைகளைத் தவிர வேறு உணவு கிடையாது. இதனால் எங்கள் வாய்கள் புண்ணாகி விட்டன. நான் ஒரு போர்வையை எடுத்து எனக்கு ஒரு துண்டு, ஸஅதுக்கு ஒரு துண்டு என இரண்டாகக் கிழித்தேன். பாதியை அவர் அணிந்தார். மீதிப் பாதியை நான் அணிந்தேன். ஆனால் இன்று எங்களில் யாரும் நகரங்களில் ஏதாவது ஒரு நகரத்தில் அமீர் பொறுப்பை வகிக்காமல் இல்லை.

அறிவிப்பவர் : உத்பா பின் கஸ்வான் (ரலி)

நூல் : முஸ்லிம்

**حدثنا شيبان بن فروخ حدثنا سليمان بن المغيرة حدثنا حميد بن هلال عن خالد بن عمير العدوي قال خطبنا عتبة بن غزوان فحمد الله وأثنى عليه ثم قال أما بعد فإن الدنيا قد آذنت بصرم وولت حذاء ولم يبق منها إلا صبابة كصبابة الإناء يتصابها صاحبها وإنكم منتقلون منها إلى دار لا زوال لها فانتقلوا بخير ما بحضرتكم فإنه قد ذكر لنا أن الحجر يلقى من شفة جهنم فيهوي فيها سبعين عاما لا يدرك لها قعرا و والله لتملأن أفعجبتم ولقد ذكر لنا أن ما بين مصراعين من مصاريع الجنة مسيرة أربعين سنة وليأتين عليها يوم وهو كظيظ من الزحام ولقد رأيتني سابع سبعة مع رسول الله صلى الله عليه وسلم ما لنا طعام إلا ورق الشجر حتى قرحت أشداقنا فالتقطت بردة فشققتها بيني وبين سعد بن مالك فاتزرت بنصفها واتزر سعد بنصفها فما أصبح اليوم منا أحد إلا أصبح أميرا على مصر من الأمصار وإني أعوذ بالله أن أكون في نفسي عظيما وعند الله صغيرا وإنها لم تكن نبوة قط إلا تناسخت حتى يكون آخر عاقبتها ملكا فستخبرون وتجربون الأمراء بعدنا و حدثني إسحق بن عمر بن سليط حدثنا سليمان بن المغيرة حدثنا حميد بن هلال عن خالد بن عمير وقد أدرك الجاهلية قال خطب عتبة بن غزوان وكان أميرا على البصرة فذكر نحو حديث شيبان**

முஆவியா (ரலி) ஸஅத் அவர்களை அமீராக நியமித்தார்கள்.

அறிவிப்பவர் : ஸஅத் பின் அபீ வக்காஸ் (ரலி)

நூல் : முஸ்லிம்

இந்த ஹதீஸ்கள் அனைத்தும் ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு அமீர்கள் நியமிக்கப்பட்டதைத் தெரிவிக்கின்றன.

இதிலிருந்து தெரிவதென்ன?

இஸ்லாமிய ஆட்சி முறையில் ஒரே ஒரு தலைவர் இருப்பார். அவர் கலீஃபா அல்லது அமீருல் மூமினீன் என்று கூறப்படுவார். அவர் பல பணிகளுக்கும், பகுதிகளுக்கும் அதிகாரிகளை நியமிப்பார். அவர்களே அமீர்கள் எனப்பட்டனர் என்பதை மேலே நாம் எடுத்துக் காட்டிய சான்றுகளிலிருந்து அறியலாம்.

ஒருவர் அமீராக இருக்க வேண்டுமானால் அவருக்கு மேலே ஒரு இமாம், கலீஃபா, சுல்த்தான், அமீருல் மூமினீன் இருந்தாக வேண்டும். அவர்களால் அவர் நியமிக்கப்பட்டிருக்கவும் வேண்டும்.

மேலே நாம் எடுத்துக் காட்டிய சான்றுகளில் பயன்படுத்தப்பட்டுள்ள வாசகமும் கூட இதை விளக்குகின்றது. அமீராக ஆக்கினார்கள், அமீராக நியமித்தார்கள் போன்ற வார்த்தைகள் தான் இங்கே பயன்படுத்தப்பட்டுள்ளனவே தவிர அவர்களாக அமீராக ஆனார்கள் என்று கூறப்படவில்லை. அல்லது மக்களால் அமீராக ஆக்கப்பட்டார்கள் என்றும் கூறப்படவில்லை.

மக்கள் ஒரேயொரு தலைவரை, கலீஃபாவை மட்டும் தான் தேர்வு செய்வார்கள். அவர் தான் எல்லாப் பகுதிகளுக்கும் அமீரை நியமிப்பார்.

எனவே நாம் ஒருவரை அமீர் என்று கூறுவதானால் அவரை அமீராக நியமித்த இமாம் ஒருவர் இருந்தாக வேண்டும். எவ்வித அதிகாரமும் இல்லாமல் தானாக ஒருவர் அமீராகலாம், அல்லது மக்களில் சிலர் ஒருவரை அமீராக்கலாம் என்று கூறுவோர் அதற்கான ஒரே ஒரு ஆதாரத்தைக் கூட காட்ட முடியாது. நாம் தேடிய வரை அப்படி ஒரு ஆதாரத்தைக் காண முடியவில்லை.

இந்த விளக்கத்தை நாம் புதிதாகக் கண்டுபிடித்து விடவில்லை.

புகாரி இமாம் அவர்கள் இமாமுக்குக் கட்டுப்படுதல் என்ற தலைப்பில் ஒரு பாடத்தை புகாரியில் இடம் பெறச் செய்துள்ளார். ஆனால் அப்பாடத்தில் அவர்

எடுத்துக் காட்டும் ஹதீஸ்கள் அமீருக்குக் கட்டுப்படுவதைத் தான் கூறுகின்றன. இமாமுக்கு கட்டுப்படுவதைப் பற்றி எந்த ஹதீஸையும் அப்பாடத்தில் அவர் கூறவில்லை.

இதற்கு விளக்கம் கூறும் போது ஹாபிழ் இப்னு ஹஜர் அவர்கள் இப்படிக் கூறுகிறார்கள்:

இப்பாடத்தில் இமாமுக்குக் கட்டுப்படுதல் பற்றி ஒரு ஹதீஸையும் கூறாமல் இமாமுக்குக் கட்டுப்படுதல் என்று புகாரி தலைப்பிட்டுள்ளார். இதற்குக் காரணம் அமீர் என்பவர் இமாமால் நியமிக்கப்பட்டவர் தான். எனவே அமீருக்குக் கட்டுப்படுவது உண்மையில் இமாமுக்குக் கட்டுப்படுவது தான்" இவ்வாறு இப்னு ஹஜர் அவர்கள் விளக்கம் சொல்கிறார்கள்.

அமீர் என்பவர் இமாமால் நியமிக்கப்பட்டவராக இருக்க வேண்டும் என்பதை இவ்விளக்கம் உறுதி செய்கிறது. இது வரை நாம் பார்த்த செய்திகளிலிருந்து எல்லா அதிகாரங்களும் படைத்த ஒரு ஆட்சியாளரால் ஒரு குறிப்பிட்ட பகுதியை நிர்வகிக்க அல்லது ஒரு குறிப்பிட்ட பணியைப் பூர்த்தி செய்ய நியமிக்கப்பட்டவர்கள் தான் அமீர்கள். எனவே அமீர் என்பவர் குறுகிய அதிகாரம் படைத்த அதிகாரி என்பது தெளிவாகின்றது.

அதிகாரம் இல்லாமல் இமாமோ, அமீரோ இருக்க முடியாது.

ஒட்டு மொத்த சமுதாயத்திற்கும் இமாமாக இருந்தாலும் சரி, அல்லது ஒரு குறிப்பிட்ட பகுதிக்கோ, பணிக்கோ நியமிக்கப்பட்ட அமீராக இருந்தாலும் சரி தம்முடைய தலைமையின் கீழ் உள்ளவர்கள் மீது அதிகாரம் செலுத்துபவராக அவர்கள் இருக்க வேண்டும். தனது உத்தரவுக்குக் கட்டுப்பட மறுப்பவர்களைத் தண்டிக்கும் அதிகாரம் உட்பட எல்லா அதிகாரங்களையும் உடையவராக இருக்க வேண்டும்.

இதற்கான ஆதாரங்கள் இன்னும் உள்ளன. அவற்றை ஒன்றன் பின் ஒன்றாகப் பார்ப்போம்.

**حدثنا عبدان أخبرنا عبد الله عن يونس عن الزهري أخبرني أبو سلمة بن عبد الرحمن أنه سمع أبا هريرة رضي الله عنه أن رسول الله صلى الله عليه وسلم قال من أطاعني فقد أطاع الله ومن عصاني فقد عصى الله ومن أطاع أميري فقد أطاعني ومن عصى أميري فقد عصاني**

யார் எனக்குக் கட்டுப்பட்டாரோ அவர் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டார். யார் எனக்கு மாறு செய்வாரோ அவர் அல்லாஹ்வுக்கு மாறு செய்து விட்டார். யார் எனது அமீருக்கு கட்டுப்பட்டாரோ அவர் எனக்குக் கட்டுப்பட்டார். யார் என்னுடைய அமீருக்கு மாறு செய்கிறாரோ அவர் எனக்கு மாறு செய்து விட்டார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி 7147

ஒருவர் அமீருக்கு மாறு செய்தால் அல்லாஹ்வின் தூதருக்கு மாறு செய்தார் என்று மக்கள் பரவலாகக் கூறி வருகின்றனர். ஆனால் இந்த ஹதீஸில் என்னுடைய அமீருக்கு யார் கட்டுப்பட்டாரோ என்ற வாசகத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பயன்படுத்தியுள்ளார்கள்.

என்னுடைய அமீர் என்றால் என்னால் நியமிக்கப்பட்ட அமீர் என்பது கருத்தாகும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒருவரை அமீராக நியமித்தால் அவரை எதிர்ப்பது நியமித்தவரையே எதிர்ப்பதாகும் என்ற கருத்து தான் இதில் அடங்கியுள்ளது. அது அறிவுக்கும் பொருத்தமாக உள்ளது.

நாலு பேர் கூடிக் கொண்டு ஒருவரை அமீர் என்று இவர்களாக நியமித்துக் கொண்டு அவருக்குக் கட்டுப்படுவது அல்லாஹ்வின் தூதருக்குக் கட்டுப்படுவதற்குச் சமம் என்று கூறினால் அது மாபெரும் மோசடியாகும்.

எவனோ ஒருவனுக்குக் கட்டுப்படுவது ஒரு காலத்திலும் அல்லாஹ்வின் தூதருக்குக் கட்டுப்படுவதாக ஆகவே ஆகாது.

இன்றைக்குக் கூட ஒரு அதிபர் சில பகுதிகளை நிர்வாகம் செய்ய ஒரு அமீரை நியமித்தால் அவருக்குக் கட்டுப்படுவது அல்லாஹ்வின் தூதருக்குக்

கட்டுப்படுவதாக ஆகாது. மாறாக எந்த அரசாங்கம் அவரை நியமித்ததோ அந்த அரசாங்கத்துக்கும் அதன் அதிபருக்கும் கட்டுப்படுவதாகத் தான் அது அமையும்.

என்னுடைய அமீருக்கு என்ற வாசகத்தில் இருந்து இதை நாம் சிந்தித்து விளங்கலாம்.

நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்விற்குக் கட்டுப்படுங்கள். (அல்லாஹ்வின்) தூதருக்கும், உங்களில் (நேர்மையாக) அதிகாரம் வகிப்பவர்களுக்கும் கட்டுப்படுங்கள். உங்களில் ஏதாவது ஒரு விஷயத்தில் பிணக்கு ஏற்படுமானால் மெய்யாகவே நீங்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்புபவர்களாக இருந்தால் அதை அல்லாஹ்விடமும் அவன் தூதரிடமும் ஒப்படைத்து விடுங்கள். இது தான் (உங்களுக்கு) மிகவும் சிறப்பான அழகான முடிவாக இருக்கும்.

திருக்குர்ஆன் 4:59

அமீருக்குக் கட்டுப்படுவதை வலியுறுத்தும் அல்லாஹ்வின் கட்டளை இது. அமீருக்குக் கட்டுப்படுங்கள் என்று இறைவன் கூறாமல் உலில் அம்ரி என்று கூறுகிறான்.

உலு என்றால் உடையவர்கள் என்று பொருள்.

அம்ர் என்றால் அதிகாரம் என்று பொருள்.

இரண்டையும் சேர்த்து உலுல் அம்ர் எனக் கூறினால் அதிகாரம் உடையவர் என்பது பொருளாகும்.

ஆட்சி, அதிகாரம் உள்ளவர்களுக்குக் கட்டுப்படுவதைத் தான் இவ்வசனம் கூறுகின்றது என்பதில் இரண்டாம் கருத்துக்கு இடமில்லை.

அதிகாரம் உடையவர்கள் என்று அல்லாஹ் கூறியிருக்கும் போது அதிகாரம் இல்லாதவர்கள் தங்களுக்கு மக்களைக் கட்டுப்பட வைக்க இவ்வசனத்தைப் பயன்படுத்துவது மார்க்கத்தில் செய்யப்படும் மிகப் பெரும் மோசடியாகும்.

அகராதியின் பொருளின் படியும், அல்லாஹ் பயன்படுத்திய வாசக அமைப்பின் படியும் அமீர் என்பவர் ஆட்சி அதிகாரம் உடையவரே! அவ்வாறில்லாதவர் ஒரு போதும் அமீராக மாட்டார்.

## அமீரின் அதிகாரங்கள்

### ஸகாத்தை எடுத்துக் கொள்ளும் அதிகாரம்.

**حدثنا أبو عاصم الضحاك بن مخلد عن زكرياء بن إسحاق عن يحيى بن عبد الله بن صيفي عن أبي معبد عن ابن عباس رضي الله عنهما أن النبي صلى الله عليه وسلم بعث معاذا رضي الله عنه إلى اليمن فقال ادعهم إلى شهادة أن لا إله إلا الله وأني رسول الله فإن هم أطاعوا لذلك فأعلمهم أن الله قد افترض عليهم خمس صلوات في كل يوم وليلة فإن هم أطاعوا لذلك فأعلمهم أن الله افترض عليهم صدقة في أموالهم تؤخذ من أغنيائهم وترد على فقرائهم**

நபியவர்கள் ஏமனுக்கு (ஆளுனராக) முஆதை அனுப்பி வைக்கும் போது வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. நிச்சயமாக நான் அல்லாஹ்வின் தூதராவேன் என்று ஒப்புக் கொள்வதற்கு அம்மக்களை அழையுங்கள். அதற்கு அவர்கள் கட்டுப்பட்டு விட்டால், அல்லாஹ் ஒவ்வொரு இரவு, பகலிலும் ஐந்து நேரத் தொழுகையை அவர்கள் மீது கடமையாக்கியுள்ளான் என்று அவர்களிடம் அறிவித்து விடுங்கள். இதற்கு அவர்கள் கட்டுப்பட்டு விட்டால், அவர்களுடைய பொருளில் அல்லாஹ் ஸகாத்தைக் கடமையாக்கியுள்ளான்; அந்த ஸக்காத்தை அவர்களிடம் உள்ள செல்வந்தர்களிடமிருந்து எடுத்து அவர்களிலுள்ள ஏழைகளுக்கு வழங்குங்கள் என்று அவர்களிடம் தெரிவித்து விடுங்கள் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் :புகாரி 1395

இந்த ஹதீஸில் ஸகாத்தை எடுத்து என்ற வாசகம் இடம் பெறுகின்றது. ஸக்காத்தை எடுப்பதை அதிகாரம் இல்லாமல் செய்ய முடியாது. எனவே அமீராக இருப்பவர் ஒரு பகுதிக்காக நியமிக்கப்பட்டிருந்தாலும் அவர் ஸக்காத்தை வசூலிக்கும் அதிகாரத்தை உடையவராக இருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது.

## ஸக்காத் தர மறுத்தவர்களிடம் போர் செய்யும் அதிகாரம்

**حدثنا أبو اليمان الحكم بن نافع أخبرنا شعيب بن أبي حمزة عن الزهري حدثنا عبيد الله بن عبد الله بن عتبة بن مسعود أن أبا هريرة رضي الله عنه قال لما توفي رسول الله صلى الله عليه وسلم وكان أبو بكر رضي الله عنه وكفر من كفر من العرب فقال عمر رضي الله عنه كيف تقاتل الناس وقد قال رسول الله صلى الله عليه وسلم أمرت أن أقاتل الناس حتى يقولوا لا إله إلا الله فمن قالها فقد عصم مني ماله ونفسه إلا بحقه وحسابه على الله فقال والله لأقاتلن من فرق بين الصلاة والزكاة فإن الزكاة حق المال والله لو منعوني عناقا كانوا يؤدونها إلى رسول الله صلى الله عليه وسلم لقاتلتهم على منعها قال عمر رضي الله عنه فوالله ما هو إلا أن قد شرح الله صدر أبي بكر رضي الله عنه فعرفت أنه الحق**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மரனித்து அபூபக்ர் (ரலி) அவர்களின் ஆட்சி வந்ததும் அரபிகளில் சிலர் (ஸக்காத்தை மறுத்ததின் மூலம்) காஃபிர்களாகி விட்டனர். (அவர்களுடன் போர் செய்ய அபூ பக்ர் தயாரானார்கள்.) உமர் (ரலி) அவர்கள் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவர் தனது உயிரையும், உடைமையையும் என்னிடம் இருந்து காத்துக் கொண்டார். தண்டனைக்குரிய குற்றங்களைப் புரிந்தவரைத் தவிர! அவரது விசாரனை அல்லாஹ்விடமே உள்ளது" என நபியவர்கள் கூறியிருக்கும் போது நீங்கள் இந்த மக்கள் மீது எப்படிப் போர் தொடுக்க முடியும்? என்று கேட்டார்கள். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் உமரை நோக்கி அல்லாஹ்வின் மீது ஆணையாக தொழுகையையும், ஸக்காத்தையும் பிரித்துப் பார்ப்பவர்களுடன் நிச்சயமாக நான் போர் செய்வேன். ஸக்காத் செல்வந்தர்களுக்குரிய கடமையாகும். அல்லாஹ் மீது ஆணையாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வழங்கி வந்த ஒரு ஒட்டகக் குட்டியை இவர்கள் வழங்க மறுத்தால் கூட அதைத் தர மறுத்ததற்காக நான் அவர்களுடன் போர் தொடுப்பேன்" என்று கூறினார்கள். இது பற்றி உமர் அவர்கள் கூறும் போது அல்லாஹ் மீது ஆணையாக அபூபக்ரின் இதயத்தை (தீர்க்கமான தெளிவைப் பெறும் விதத்தில்) அல்லாஹ் விசாலமானதாக ஆக்கி இருப்பதால் தான் அவர் இவ்வாறு கூறினார். அவர் கூறியதே சரி என்பதை நான் விளங்கிக் கொண்டேன்" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

ஆதாரம் : புகாரி 1400

ஸக்காத்தை எடுக்க வேண்டும் என்ற முந்தைய ஹதீஸுக்கு இந்த ஹதீஸ் விளக்கமாக அமைந்துள்ளது. மேலும் ஸக்காத்தைத் தர மறுப்பவர்களிடம் போர்

செய்து, ஸக்காத்தை வசூலிக்கும் அதிகாரம் ஆட்சியாளருக்கு இருக்க வேண்டும் என்பதை இந்த ஹதீஸ் உணர்த்துகின்றது. இந்த அதிகாரம் இமாமுக்கும் இமாமால் நியமிக்கப்படும் அமீருக்கும் இருக்க வேண்டும் என்பதையும் இந்த ஹதீஸ் உணர்த்துகின்றது.

வரி வசூல் செய்யும் அதிகாரம்.

**حدثنا أبو اليمان أخبرنا شعيب عن الزهري قال حدثني عروة بن الزبير عن المسور بن مخرمة أنه أخبره أن عمرو بن عوف الأنصاري وهو حليف لبني عامر بن لؤي وكان شهد بدرا أخبره أن رسول الله صلى الله عليه وسلم بعث أبا عبيدة بن الجراح إلى البحرين يأتي بجزيتها وكان رسول الله صلى الله عليه وسلم هو صالح أهل البحرين وأمر عليهم العلاء بن الحضرمي فقدم أبو عبيدة بمال من البحرين فسمعت الأنصار بقدوم أبي عبيدة فوافت صلاة الصبح مع النبي صلى الله عليه وسلم فلما صلى بهم الفجر انصرف فتعرضوا له فتبسم رسول الله صلى الله عليه وسلم حين رآهم وقال أظنكم قد سمعتم أن أبا عبيدة قد جاء بشيء قالوا أجل يا رسول الله قال فأبشروا وأملوا ما يسركم فوالله لا الفقر أخشى عليكم ولكن أخشى عليكم أن تبسط عليكم الدنيا كما بسطت على من كان قبلكم فتنافسوها كما تنافسوها وتهلككم كما أهلكتهم**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூ உபைதா பின் அல் ஜாராஹை பஹ்ரைனில் ஜிஸ்யா (வரி) வசூலித்து வர அனுப்பினார்கள். நபியவர்கள் பஹ்ரைன் நாட்டவரிடம் உடன்படிக்கை செய்து அவர்களுக்கு அலா பின் அல்ஹழ்ரமியை அமீராக நியமித்தார்கள். அபூ உபைதா பஹ்ரைனிலிருந்து அந்தப் பொருளுடன் வந்தார். அபூ உபைதா பொருளுடன் வந்திருக்கிறார் என அன்ஸாரிகள் கேள்விப்பட்டனர்.....

அறிவிப்பவர் : அம்ர் பின் அவ்ஃப் (ரலி)

நூல் :புகாரி 3158

## கைது செய்யும் அதிகாரம்.

**حدثنا عبد الله بن يوسف قال حدثنا الليث قال حدثنا سعيد بن أبي سعيد سمع أبا هريرة قال بعث النبي صلى الله عليه وسلم خيلا قبل نجد فجاءت برجل من بني حنيفة يقال له ثمامة بن أثال فربطوه بسارية من سواري المسجد فخرج إليه النبي صلى الله عليه وسلم فقال أطلقوا ثمامة فانطلق إلى نخل قريب من المسجد فاغتسل ثم دخل المسجد فقال أشهد أن لا إله إلا الله وأن محمدا رسول الله**

நஜ்தை நோக்கி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு குதிரைப் படையை அனுப்பினார்கள். அந்தப் படையினர், பனூ ஹனீப் கூட்டத்தைச் சேர்ந்த சுமாமா பின் அஸால் என்பவரைக் கைது செய்து அழைத்து வந்தனர். பள்ளியின் தூண்களில் ஒன்றில் அவரைக் கட்டிப் போட்டிருந்தனர். அவரை நோக்கி நபியவர்கள் வந்து சுமாமாவை அவிழ்த்து விடுங்கள் என்றார்கள். பள்ளிக்குப் பக்கத்திலுள்ள பேரீச்சைத் தோப்பை நோக்கிப் போய் அவர் குளித்து விட்டு பள்ளிக்கு வந்தார். அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்கு உரியவன் யாருமில்லை. நிச்சயமாக முஹம்மதவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள்' என்று சான்று கூறினார்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி 462

## அதிகார துஷ்பிரயோகம்.

**و حدثني محمد بن سهل بن عسكر التميمي حدثنا يحيى بن حسان ح و حدثنا عبد الله بن عبد الرحمن الدارمي أخبرنا يحيى وهو ابن حسان حدثنا معاوية يعني ابن سلام حدثنا زيد بن سلام عن أبي سلام قال قال حذيفة بن اليمان قلت يا رسول الله إنا كنا بشر فجاء الله بخير فنحن فيه فهل من وراء هذا الخير شر قال نعم قلت هل وراء ذلك الشر خير قال نعم قلت فهل وراء ذلك الخير شر قال نعم قلت كيف قال يكون بعدي أئمة لا يهتدون بهداي ولا يستنون بسنتي وسيقوم فيهم رجال قلوبهم قلوب الشياطين في جثمان إنس قال قلت كيف أصنع يا رسول الله إن أدركت ذلك قال تسمع وتطيع للأمير وإن ضرب ظهرك وأخذ مالك فاسمع وأطع**

அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் தீமையில் இருந்தோம். நாங்கள் எந்த நன்மையில் இருக்கிறோமோ (இஸ்லாம்) அந்த நன்மையில் அல்லாஹ் எங்களைக் கொண்டு வந்தான். இந்த நன்மைக்குப் பிறகு தீமை உண்டா எனக் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்றார்கள். அந்தத் தீமைக்குப் பிறகு நன்மை உண்டா எனக் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்றார்கள். அந்த நன்மைக்குப் பிறகு தீமை உண்டா எனக் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்றார்கள். அது எப்படி இருக்கும் என்று வினவினேன். அதற்கு அவர்கள் எனது நேர்வழியைக் கொண்டு திருந்தாத,

எனது நடைமுறையைப் பின்பற்றாத தலைவர்கள் தோன்றுவார்கள். அவர்களில் மனித உடல்களையும், ஷைத்தானின் உள்ளங்களையும் கொண்ட மனிதர்கள் ஆட்சி செலுத்துவார்கள் எனப் பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் தூதரே அந்த நிலையை நான் அடைந்து விட்டால் என்ன செய்ய வேண்டும் எனக் கேட்டேன். அதற்கு அவர்கள் அந்த அமீர் உன்னுடைய முதுகில் அடித்துத் தாக்கி உன் பொருளைப் பறித்துக் கொண்டாலும் நீ அவருக்குச் செவி சாய்த்துக் கட்டுப்படு என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஹுதைஃபா (ரலி)

நூல் : முஸ்லிம்

இந்த ஹதீஸ் அமீருக்குக் கட்டுப்படுவதைச் சொன்னாலும் அந்த அமீரின் தன்மைகளைப் பற்றி நபியவர்கள் கூறும் செய்தி குறிப்பிடத்தக்கது. உன்னுடைய முதுகில் அடித்துத் தாக்கி உன் பொருளைப் பறித்துக் கொண்டாலும் சரியே என்ற வாசகத்தில் இருந்து அமீர் என்றால் எந்தளவுக்கு அதிகாரம் படைத்தவர் என்பது தெளிவாகின்றது.

**حدثنا محمد بن المثنى ومحمد بن بشار قالا حدثنا محمد بن جعفر حدثنا شعبة عن سماك بن حرب عن علقمة بن وائل الحضرمي عن أبيه قال سأل سلمة بن يزيد الجعفي رسول الله صلى الله عليه وسلم فقال يا نبي الله أرأيت إن قامت علينا أمراء يسألونا حقهم ويمنعونا حقنا فما تأمرنا فأعرض عنه ثم سأله فأعرض عنه ثم سأله في الثانية أو في الثالثة فجذبه الأشعث بن قيس وقال اسمعوا وأطيعوا فإنما عليهم ما حملوا وعليكم ما حملتم و حدثنا أبو بكر بن أبي شيبة حدثنا شبابة حدثنا شعبة عن سماك بهذا الإسناد مثله وقال فجذبه الأشعث بن قيس فقال رسول الله صلى الله عليه وسلم اسمعوا وأطيعوا فإنما عليهم ما حملوا وعليكم ما حملتم**

ஸலமா பின் யஸீத் அல் ஜுஃபி என்பவர் நபியவர்களிடம் கேள்வி கேட்க ஆரம்பித்தார். அப்போது அவர் தங்கள் உரிமைகளை (வரிகளை) பெற்று விட்டு எங்களுக்குரிய உரிமைகளை (குடிமக்களுக்குச் செய்ய வேண்டிய வசதிகளை) மறுக்கின்ற அமீர்கள் எங்களை ஆளுகின்ற நிலை வரும் போது நீங்கள் எங்களுக்கு என்ன உத்தரவிட நினைக்கிறீர்கள்? எனக் கேட்டார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவரது கேள்வியை அலட்சியம் செய்தார்கள். மீண்டும் அவர் கேட்கவே நபியவர்கள் அவரை அலட்சியம் செய்தார்கள். இரண்டாவதோ, அல்லது மூன்றாவதோ அவர் கேட்டதும் அவரை அஷ்அஸ் பின் கைஸ் அவர்கள் இழுத்துச் சென்று செவிசாயுங்கள், கட்டுப்படுங்கள் அவர்கள் மீது சுமத்தப்பட்டது

அவர்களுக்கு. உங்கள் மீது சுமத்தப்பட்டது உங்களுக்கு என்று அவரிடம் கூறினார்கள். இவ்வார்த்தையை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களே அந்த மனிதரிடம் கூறியதாக மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

அறிவிப்பவர் : வாயில் பின் ஹுஜ்ர் அல்ஹழ்ரமி (ரலி)

நூல் : முஸ்லிம்

இந்த ஹதீஸ் வரி விதித்துவிட்டு வசதிகள் செய்யாத அமீரைப் பற்றியதாகும். வரிகள் விதிப்பதும், வசதிகள் செய்து கொடுப்பதும் அமீரின் அதிகாரங்களில் உள்ளதாகும். அதே நேரம் வரியை மட்டும் வாங்கி விட்டு வசதிகளை மறுப்பதும் குற்றம் என்றாலும் அதைச் செய்யும் அதிகாரம் அமீரிடம் இருக்கும் என்பதை மறுக்க முடியாது.

அமைச்சர்களை நியமிக்கும் அதிகாரம்.

**حدثنا محمد بن خالد الذهلي حدثنا الأنصاري محمد بن عبد الله قال حدثني أبي عن ثمامة عن أنس بن مالك قال إن قيس بن سعد كان يكون بين يدي النبي صلى الله عليه وسلم بمنزلة صاحب الشرط من الأمير**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கைஸ் பின் ஸஅத் (ரலி) அவர்கள் ஓர் அமீரிடம் பணியாற்றும் இராணுவ அமைச்சரின் பதவியை வகித்தார்கள். அதாவது நபியவர்களின் கட்டளைகளில் கவனம் மேற்கொண்டார்கள்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் :புகாரி 7155

மேற்கண்ட ஹதீஸ் ஒரு இமாமோ அல்லது அமீரோ தேவையான பதவிகளை உருவாக்கி அதற்கென அமைச்சர்களை நியமிக்கும் அதிகாரம் உடையவர்களாக இருக்க வேண்டும் என்பதைக் காட்டுகின்றது.

## போர்ப் படையை அனுப்பும் அதிகாரம்.

**حدثنا خالد بن مخلد حدثنا سليمان قال حدثني عبد الله بن دينار عن عبد الله بن عمر رضي الله عنهما قال بعث النبي صلى الله عليه وسلم بعثا وأمر عليهم أسامة بن زيد فطعن بعض الناس في إمارته فقال النبي صلى الله عليه وسلم أن تطعنوا في إمارته فقد كنتم تطعنون في إمارة أبيه من قبل وايم الله إن كان لخليقا للإمارة وإن كان لمن أحب الناس إلي وإن هذا لمن أحب الناس إلي بعده**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு படையை அனுப்பினார்கள். அந்தப் படைக்கு உஸாமா பின் ஸைதை அமீராக நியமித்தார்கள். உஸாமாவை அமீராக ஆக்கியதை சிலர் குறை கண்டனர். (இதைக் கேள்விப்பட்ட) நபியவர்கள் இவருடைய தலைமைப் பதவியில் நீங்கள் குறை கண்டீர்கள் என்றால், இதற்கு முன் இவருடைய தந்தையுடைய தலைமையிலும் நீங்கள் குறை கண்டிருக்கிறீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் தலைமைப் பொறுப்புக்குத் தகுதியானவராக இருந்தார். மக்களிலேயே எனக்கு மிக விருப்பமானவராக இருந்தார். அவருக்குப் பின் இவர் (உஸாமா) எனக்கு மிக நேசத்திற்குரியவராக இருக்கிறார் என்றார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)

நூல் : புகாரி 3730

**وبهذا الإسناد من أطاعني فقد أطاع الله ومن عصاني فقد عصى الله ومن يطع الأمير فقد أطاعني ومن يعص الأمير فقد عصاني وإنما الإمام جنة يقاتل من ورائه ويتقى به فإن أمر بتقوى الله وعدل فإن له بذلك أجرا وإن قال بغيره فإن عليه منه**

இமாம் என்பவர் ஒரு கேடயமாவார்! அவருக்குப் பின் நின்று மக்கள் போராடுவார்கள். அவரையே மக்கள் அரணாக ஆக்கிக் கொள்வார்கள். அவர் அல்லாஹ்வின் அச்சத்தை ஏவி நீதமாக நடந்தால் அதற்குரிய கூலி அவருக்குக் கிடைத்து விடும். அதற்கு மாறானதை அவர் சொன்னால் அந்தப் பாவத்திலிருந்து அவருக்குப் பங்கு கிடைக்கும் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி2957

**حدثنا علي بن عبد الله حدثنا سفيان قال الذي حفظناه من عمرو بن دينار قال سمعت جابر بن عبد الله يقول بعثنا رسول الله صلى الله عليه وسلم ثلاث مائة راكب أميرنا أبو عبيدة بن الجراح نرصد عير قريش فأقمنا بالساحل نصف شهر فأصابنا جوع شديد حتى أكلنا الخبط فسمي ذلك الجيش جيش الخبط فألقى لنا البحر دابة يقال لها العنبر فأكلنا**

**منه نصف شهر وادهنا من ودكه حتى ثابت إلينا أجسامنا فأخذ أبو عبيدة ضلعا من أضلاعه فنصبه فعمد إلى أطول رجل معه قال سفيان مرة ضلعا من أضلاعه فنصبه وأخذ رجلا وبعيرا فمر تحته قال جابر وكان رجل من القوم نحر ثلاث جزائر ثم نحر ثلاث جزائر ثم نحر ثلاث جزائر ثم إن أبا عبيدة نهاه وكان عمرو يقول أخبرنا أبو صالح أن قيس بن سعد قال لأبيه كنت في الجيش فجاعوا قال انحر قال نحرت قال ثم جاعوا قال انحر قال نحرت قال ثم جاعوا قال انحر قال نحرت ثم جاعوا قال انحر قال نهيت**

குரைஷிகளுக்குரிய ஒட்டகக் கூட்டத்தை எதிர்பார்த்துத் தாக்குவதற்கு எங்களை நபியவர்கள் அனுப்பினார்கள். எங்களின் படையில் 300 குதிரை வீரர்கள் இருந்தார்கள். எங்களுடைய அமீராக அபூ உபைதா பின் ஜர்ராஹ் இருந்தார்.

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)

நூல் : புகாரி 4361

மேற்கண்ட ஹதீஸ்களின் படி ஒரு இமாம் அல்லது அமீர் என்பவர் போர்ப் பிரகடனம் செய்யும் அதிகாரத்தையும், போருக்குப் படையை அனுப்பும் அதிகாரத்தையும் பெற்றவராக இருக்க வேண்டும். இன்னும் படையை நடத்திச் சென்று போரிடும் அதிகாரத்தையும், சக்தியையும் பெற்றிருக்க வேண்டும். அது மட்டுமன்றி களத்தில் இறங்கி முன்னின்று போரிட்டு மக்களைக் காக்கக் கூடியவராகவும் இருக்க வேண்டும் என்பதை இந்த ஹதீஸ்கள் நமக்கு உணர்த்துகின்றன.

## தீர்ப்பு வழங்கும் அதிகாரம்.

**حدثنا قتيبة بن سعيد حدثنا ليث عن ابن شهاب عن عروة عن عائشة رضي الله عنها أن قريشا أهمهم شأن المرأة المخزومية التي سرقت فقالوا ومن يكلم فيها رسول الله صلى الله عليه وسلم فقالوا ومن يجترئ عليه إلا أسامة بن زيد حب رسول الله صلى الله عليه وسلم فكلمه أسامة فقال رسول الله صلى الله عليه وسلم أتشفع في حد من حدود الله ثم قام فاختطب ثم قال إنما أهلك الذين قبلكم أنهم كانوا إذا سرق فيهم الشريف تركوه وإذا سرق فيهم الضعيف أقاموا عليه الحد وايم الله لو أن فاطمة بنت محمد سرقت لقطعت يدها**

மக்ஸூமி குலத்துப் பெண்ணொருத்தி (பாத்திமா பின்த் அல் அஸ்வத்) திருட்டுக் குற்றம் செய்திருந்தாள். அவள் விஷயமாக குறைஷிகள் மிகவும் கவலைக்குள்ளாகினர். அவள் விஷயமாக அல்லாஹ்வின் தூதரிடம் பேசுவது யார்? என்று தமக்குள் பேசிக் கொண்டார்கள். அவர்களில் சிலர் அல்லாஹ்வின் தூதருடைய செல்லப் பிள்ளையான உஸாமா பின் ஸைத் அவர்களைத் தவிர இதற்கு வேறு யாருக்குத் துணிவு வரும் என்று கூறினார்கள். உஸாமா அவர்கள் அவள் விஷயமாக நபியிடம் பேசினார்கள். அதற்கு நபியவர்கள் அல்லாஹ்வின் தண்டனைகளில் ஒரு தண்டனை விஷயத்திலா நீ பரிந்துரை செய்கிறாய் என்று (கோபத்துடன்) கேட்டு விட்டு பிறகு எழுந்து உரை நிகழ்த்தினார்கள். பிறகு உங்களுக்கு முன் சென்றவர்கள் அழிக்கப்பட்டதெல்லாம் அவர்களில் உயர் குலத்தவன் திருடி விட்டால் அவனை (தண்டிக்காமல்) விட்டு விடுவார்கள். அவர்களில் பலவீனமான(பிரிவைச் சேர்ந்த)வன் திருடினால் அவனுக்குத் தண்டனை அளித்து வந்தார்கள் என்பதால் தான். அல்லாஹ்வின் மீது சத்தியமாக முஹம்மதின் மகள் பாத்திமா திருடியிருந்தாலும் அவரது கையையும் நான் துண்டித்திருப்பேன் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரி 3475

இந்த ஹதீஸில் ஆட்சியாளர் என்பவர் எந்த அளவுக்கு நேர்மையாளராக இருக்க வேண்டும் என்று உணர்த்துகின்ற அதே வேளையில் தீர்ப்பு சொல்லக் கூடிய அதிகாரமும் அவருக்கு இருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது.

தண்டனை வழங்கும் அதிகாரம்.

و حدثني محمد بن العلاء الهمداني حدثنا يحيى بن يعلى وهو ابن الحارث المحاربي عن غيلان وهو ابن جامع المحاربي عن علقمة بن مرثد عن سليمان بن بريدة عن أبيه قال جاء ماعز بن مالك إلى النبي صلى الله عليه وسلم فقال يا رسول الله طهرني فقال ويحك ارجع فاستغفر الله وتب إليه قال فرجع غير بعيد ثم جاء فقال يا رسول الله طهرني فقال رسول الله صلى الله عليه وسلم ويحك ارجع فاستغفر الله وتب إليه قال فرجع غير بعيد ثم جاء فقال يا رسول الله طهرني فقال النبي صلى الله عليه وسلم مثل ذلك حتى إذا كانت الرابعة قال له رسول الله فيم أطهرك فقال من الزنى فسأل رسول الله صلى الله عليه وسلم أبه جنون فأخبر أنه ليس بمجنون فقال أشرب خمرا فقام رجل فاستنكهه فلم يجد منه ريح خمر قال فقال رسول الله صلى الله عليه وسلم أزنيت فقال نعم فأمر به فرجم فكان الناس فيه فرقتين قائل يقول لقد هلك لقد أحاطت به خطيئته وقائل يقول ما توبة أفضل من توبة ماعز أنه جاء إلى النبي صلى الله عليه وسلم فوضع يده في يده ثم قال اقتلني بالحجارة قال فلبثوا بذلك يومين أو ثلاثة ثم جاء رسول الله صلى الله عليه وسلم وهم جلوس فسلم ثم جلس فقال استغفروا لماعز بن مالك قال فقالوا غفر الله لماعز بن مالك قال فقال رسول الله صلى الله عليه وسلم لقد تاب توبة لو قسمت بين أمة لوسعتهم قال ثم جاءته امرأة من غامد من الأزد فقالت يا رسول الله طهرني فقال ويحك ارجعي فاستغفري الله وتوبي إليه فقالت أراك تريد أن ترددني كما رددت ماعز بن مالك قال وما ذاك قالت إنها حبلى من الزنى فقال آنت قالت نعم فقال لها حتى تضعي ما في بطنك قال فكفلها رجل من الأنصار حتى وضعت قال فأتى النبي صلى الله عليه وسلم فقال قد وضعت الغامدية فقال إذا لا نرجمها وندع ولدها صغيرا ليس له من يرضعه فقام رجل من الأنصار فقال إلي رضاعه يا نبي الله قال فرجمها

மாயிஸ் பின் மாலிக் என்ற அஸ்லம் கிளையைச் சார்ந்த ஒருவர் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து நான் விபச்சாரம் செய்து விட்டேன்; எனக்குத் தண்டனை வழங்குங்கள் என்று கூறினார். நபியவர்கள் அவரைப் பல தடவை திருப்பி அனுப்பினார்கள். பிறகு மக்களிடத்தில் அவர்கள் விசாரித்தார்கள். அவர் மீது நாங்கள் எந்தத் தவறையும் காணவில்லை; எனினும் தன் மீது தண்டனை நிறைவேற்றப்படுவதைத் தவிர வேறு எதுவும் ஈடாகாது என்று கருதும் அளவுக்கு அவர் தப்பைச் செய்திருக்கிறார் என்று நபித் தோழர்கள் பதிலளித்தார்கள். மீண்டும் அவர் நபியவர்களிடம் வந்தார். அவரைக் கல்லால் எறிந்து கொல்லுமாறு நபியவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஸயீத் அல்குத்ரி (ரலி)

நூல் : முஸ்லிம்.

இது வரை அமீர் என்றால் யார்? அவருக்குரிய அதிகாரங்கள் என்ன? என்பதைப் பார்த்தோம்.

அடுத்து இன்றைக்கு தமக்குத் தாமே அமீர் பட்டம் சூட்டி மக்களை ஏமாற்றி வருவோர் அமீர்கள் என்ற பட்டத்துக்கு உரியவர்களா என்பதைப் பார்ப்போம்.

## அமீர் வாதமும் அயோக்கியத்தனமும்

இன்று இஸ்லாத்தை விட்டு விட்டு இன்னொரு மார்க்கம் கண்ட காதியானிகள் முதல் தூய இஸ்லாத்தை அனைத்து துறைகளிலும் கடைப்பிடிப்போம் என்று சொல்லக்கூடிய அமைப்புக்களும் சிறு தலைவர்களைக் கொண்ட சின்னஞ் சிறு கூட்டங்களும், குர்ஆன் கூறும் ஜிஹாதை குறுகிய அளவில் விளங்கிக் கொண்டு செயற்படும் குழுக்களும் தத்தமது அமீருக்குக் கட்டுப்பட வேண்டும் என்ற வாதத்தையே எடுத்து வைக்கின்றன.

உண்ணும் போது உன்னை அமீர் கூப்பிட்டாலும் ஓடி வர வேண்டும்

உறங்கும் போது உன்னை அமீர் கூப்பிட்டாலும் ஓடி வர வேண்டும்

என்று மூளைச் சலவை செய்கின்றன.

அமீருக்குக் கட்டுப்பட வேண்டும்; இல்லையேல் காஃபிராக ஆகி விடுவாய் என்று ஒவ்வொரு அமைப்புமே தத்தமது உறுப்பினர்களை அச்சுறுத்தி வைத்துள்ளன.

எனவே நாம் மேலே எடுத்து வைத்த ஆதாரங்களின் அடிப்படையில் தற்போது அமீர் என்று சொல்லப்படக் கூடியவர்களிடம் கீழ்க்கண்ட கேள்விகளைக் கேட்கக் கடமைப்பட்டுள்ளோம்.

தங்களை அமீர் என்று சொல்லக் கூடியவர்கள் முழுமையான ஆட்சி அதிகாரம் படைத்த மன்னர் என்ற கருத்தில் அமைந்த கலீஃபா, இமாம், சுல்த்தான், மலிக், அமீருல் முஃமினீன், அமீருல் ஆம்மா என்ற பொருளில் தங்களை அமீர் என்று சொல்லிக் கொள்கிறார்களா?

அல்லது மன்னர்களால் பல பகுதிகளுக்கு, பல பணிகளுக்காக நியமிக்கப்பட்ட அமீர் என்று தங்களை சொல்லிக் கொள்ளப் போகிறார்களா?

அமீருல் முஃமீனீன் என்ற பொருளில் தங்களை இவர்கள் அமீர் என்று கூறுவார்களேயானால் அது நகைப்புக்குரியது என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. ஏனெனில் அகில உலகையும் அடக்கியாளும் எந்த அதிகாரமும் இவர்களிடம் இல்லை.

ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு அல்லது பணிக்காக நியமிக்கப்பட்ட அமீர் என்று பதில் சொல்வார்களானால் எந்தப் பகுதிக்கு நியமிக்கப்பட்டார்கள்? எந்தப் பணிக்காக நியமிக்கப்பட்டார்கள்? இவர்களை நியமித்த இமாம் யார்? என்ற கேள்விகளுக்கு இவர்கள் பதில் சொல்லியாக வேண்டும்.

இமாமாகவோ, அமீராகவோ இருப்பவர்களின் அதிகாரங்களைப் பற்றி ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் இருந்து நாம் அறிந்து கொண்டோம். இந்த அதிகார வரம்புகளை இப்போது அமீர் என்று சொல்லிக் கொள்ளும் ஒவ்வொருவருக்கும் பொருத்திப் பார்த்து முடிவு செய்வது அவசியமாகும்.

அமீர் என்பவர் ஜக்காத்தை வசூலித்து அதை ஏழைகளுக்குப் பங்கிடும் அதிகாரம் பெற்றிருக்க வேண்டும். ஜக்காத்தைத் தர மறுப்பவர்களிடம் போர் செய்யும் அதிகாரமும் இருக்க வேண்டும். இன்று எத்தனையோ பணக்காரர்கள் ஜக்காத்தை வழங்காமல் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் எந்த அமீராவது போர் தொடுத்தார்களா?

தமிழகத்தை மட்டும் எடுத்துக் கொண்டு பேசுவோம். தமிழகத்தில் உள்ள முஸ்லிம்கள் அனைவரிடமும் ஜக்காத்தை வசூலிக்கும் அதிகாரம் தமிழ் மாநில அமீருக்கு உள்ளதா? எல்லா முஸ்லிம்களிடமும் வேண்டாம், தன்னுடைய அமைப்பின் கீழ் உள்ள உறுப்பினர்களிடத்திலாவது முறைப்படி ஜக்காத்தை எடுத்து ஏழைகளுக்கு வழங்குகிறார்களா? தர மறுப்பவர்களுடன் போர் செய்ய இவர்களால் முடியுமா? நிச்சயமாக முடியாது. எனவே ஹதீஸ்களில் வரும் அமீருக்கும் இவர்கள் கூறும் அமீருக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதை உணரலாம்.

வரி வசூல் செய்யும் அதிகாரமும் அமீருக்கு உண்டு என்று கண்டோம். தமிழ்நாட்டில் உள்ள முஸ்லிம் அல்லாத மக்களிடம் போய் வரி வசூல் செய்யக் கூடிய அமீர்கள் யாராவது இருக்கிறார்களா? ஜக்காத்தையே வாங்க முடியாதவர்களிடம் ஜிஸ்யாவைப் பற்றி பேச முடியுமா? அல்லாஹ்வின் தூதர் காட்டிய அமீருக்கும் இவர்கள் சொல்கின்ற அமீருக்கும் உள்ள வித்தியாசத்தை இதில் இருந்து தெரிந்து கொள்ளலாம்.

கைது செய்யும் அதிகாரமும் அமீருக்கு உண்டு என்று ஹதீஸ்களிலிருந்து அறிந்தோம். நமது அமீர்களிடத்தில் போய் இஸ்லாத்திற்கு மாற்றமாக நடப்பவர்களைக் கைது செய்ய உத்தரவு பிறப்பிக்க சொல்வோம். அவ்வாறு அவர் செய்து விட்டால் அமீர் என்று அவரை மனப்பூர்வமாக ஒத்துக் கொள்வோம். (அப்போதும் அவரை நியமித்த இமாம் இருக்க வேண்டும்) ஆனால் இங்குள்ள நிலைமை என்ன? தாங்கள் கைதாகி விடக்கூடாது என அஞ்சி ஓடி ஒளிந்து கொள்ளும் நிலையில் தான் அமீர்கள் என்று கூறிக் கொள்வோர் இருக்கின்றார்கள்.

அமீர்கள் என்பவர்கள் அதிகாரத்தைப் பயன்படுத்தி நம்மைத் தாக்கி நம்மிடம் உள்ள பொருட்களைப் பறித்துக் கொள்ளும் வலிமை படைத்தவர் என்பதை நாம் அறிவோம். அப்படிச் செய்தால் மறுமையில் அதற்குரிய தண்டனை இருக்கிறது என்பது ஒரு புறமிருக்க இந்த அளவுக்கு அதிகாரத்தை இந்த அமைப்புக்களின் அமீர்கள் பெற்றிருக்கிறார்களா? என்பதே நமது கேள்வி.

யாரேனும் ஒரு அமீர் அப்படிச் செய்தால் அவரின் நிலை என்னவாகும்? என்பதைச் சிந்தித்தால் போதும்.

இஸ்லாம் கூறும் அமீருக்கும் இவர்கள் கூறும் அமீருக்கும் எள்ளளவும் சம்பந்தமில்லை என்பதை இதில் இருந்தும் அறியலாம்.

இவ்வாறு நாம் கூறும் போது அடுத்தவரின் பொருளை அபகரிப்பது அமீரின் தகுதி என்று கூறுவதாக விளங்கக் கூடாது. அமீர் என்பவருக்கு அதற்குரிய சக்தி இருக்க வேண்டும் என்றே கூறுகிறோம். அதுவும் நமது இஷ்டத்திற்குக் கூறவில்லை. ஹதீஸ்களில் வருவதைத் தான் கூறுகின்றோம்.

அமீருக்கு அமைச்சர்கள் உண்டு என்பதைப் பார்த்தோம். இந்த இயக்கங்களின் அமீர்களுக்கு ராணுவ அமைச்சர் யார்? உள்துறை அமைச்சர் யார்? என்று கேட்க வேண்டும். அதெல்லாம் இல்லை என்றால் நீங்கள் அமீரும் இல்லை என்று நாம் அவர்களை நோக்கிக் கூற வேண்டும்.

அடுத்து இஸ்லாத்தைப் பாதுகாக்க போர்ப் படையைத் தயார் செய்து அனுப்பவும், தானே முன்னின்று போரிடவும் அதிகாரம் உடையவர் தான் அமீர் என்று ஹதீஸ்களில் பார்த்தோம்.

இன்று இஸ்லாத்திற்கு எதிராக எத்தனையோ விஷயங்கள் அரங்கேறிக் கொண்டிருக்கின்றன. அல்லாஹ்வின் ஆலயமாம் பாபர் மசூதி அயோக்கியர்களால் இடித்துத் தரை மட்டமாக்கப்பட்ட போது அதுவும் இந்தத் தேதியில் செய்வோம் எனக் கயவர்கள் அறிவித்து விட்டுச் செய்த போது தூய்மையான இஸ்லாத்தின் தனிப்பெரும் அமீர் நான் தான் என தன்னைச் சொல்லிக் கொள்பவர்கள் ஒரு படையைத் தயார் செய்து அதற்குத் தானே தலைமையேற்றுச் சென்றிருக்க வேண்டுமல்லவா? இல்லையே.

கள்ள பைஅத் வாங்கி ஜிஹாத் என்று மூளைச் சலவை செய்த கூட்டத்தின் அமீராவது அதைச் செய்ததுண்டா? வசூல் வேட்டைக்கும் மட்டும் தான் ஜிஹாத் வேடமா?

பாபர் பள்ளியை இடித்துவிட்டு அதிலும் திருப்தியடையாத ஓநாய்கள் மும்பையில் முஸ்லிம்களைக் கருவறுத்தார்களே! கத்னா செய்திருக்கிறானா என்று ஆடைகள் விலக்கிப் பார்க்கப்பட்டு முஸ்லிம்கள் கொல்லப்பட்டார்களே? அதற்காவது எந்த அமீராவது ஒரு படையைத் தயாரித்து அனுப்பினார்களா? இல்லையே?

கோவையில் கயவர்கள் சிலர் காவலர் ஒருவரைக் கொன்றதால் ஒட்டு மொத்த முஸ்லிம்கள் மீதும் பழியைப் போட்டு அங்கு முஸ்லிம்கள் துப்பாக்கி குண்டுக்குப் பலியானார்கள்! அப்போதாவது இந்த இயக்கத் தலைவர்கள் படையை அனுப்பினார்களா? இல்லவே இல்லை.

கோவையில் அநியாயமாக முஸ்லிம்கள் கொல்லப்பட்ட போதும், அதைத் தொடர்ந்து முஸ்லிம்களின் சொத்துக்கள் சூறையாடப்பட்ட போதும் தட்டிக் கேட்க தனது படையை அனுப்பினார்களா? இல்லையே! அவ்வாறு படையை

அனுப்புவதற்கு இவர்கள் சக்தியாவது பெற்றிருக்கிறார்களா? இல்லை. அப்படியானால் இவர்கள் யாருக்கு அமீர்?

அல்குர்ஆன் வசனத்தையும், ஹதீஸ்களையும் தங்கள் அமீர் பதவிக்கு ஆதாரமாகக் காட்ட இவர்களுக்கு என்ன தகுதியிருக்கிறது என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அடுத்ததாக குர்ஆன் ஹதீஸ் அடிப்படையில் சிவில் மற்றும் கிரிமினல் வழக்குகளில் தீர்ப்பு வழங்கும் அதிகாரம் அமீரிடம் இருக்க வேண்டும் என்பதைப் பார்த்தோம். இன்றைய அமீர்களிடத்தில் தீர்ப்பு வழங்கும் அதிகாரம் சிறிதேனும் கொடுக்கப்பட்டுள்ளதா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அவ்வாறு இவர்கள் தீர்ப்பு வழங்கினால் அதற்குக் கட்டுப்பட யாராவது இருக்கிறார்களா? என்றால் இல்லை என்றே கூற வேண்டியுள்ளது. அப்படியென்றால் இஸ்லாம் கூறிய அமீருக்கும் இந்த அமீருக்கும் சம்பந்தமில்லை என்பது தெளிவாகவில்லையா?

தீர்ப்பு வழங்கும் அதிகாரம் மட்டுமல்ல. அதைச் செயல்படுத்தி தண்டனை வழங்கும் அதிகாரமும் அமீருக்கு இருக்க வேண்டும் என்பதை ஹதீஸ்கள் மூலம் அறிந்தோம்.

இன்று யாராவது விபச்சாரம் செய்து விட்டால் அதை இங்கிருக்கும் அமைப்புக்களின் அமீரிடத்தில் தெரிவித்தால் அந்த அமீர் விபச்சாரம் செய்தவனைக் கல்லெறிந்து கொல்ல உத்தரவிட வேண்டும். அதுமட்டுமல்ல யாராவது திருடிவிட்டால் அவனை விசாரித்து அவன் கையை வெட்ட வேண்டும். இப்படியே எண்ணற்ற குற்றவியல் சட்டங்களை அமீராக இருப்பவர் நிறைவேற்ற வேண்டும்.

அவ்வாறு குற்றவியல் சட்டங்களை நிறைவேற்ற முடியுமா? அப்படியே நிறைவேற்றினாலும் அடுத்து இந்த அமீர் எங்கு இருப்பார்? அவரே தண்டனைக்குள்ளாகி இருக்க மாட்டாரா?

குர்ஆனும், ஹதீஸும் கூறிய அமீர்கள் இவர்களில்லை என்பது இதிலிருந்து விளங்கவில்லையா? இஸ்லாம் கூறக் கூடிய சட்டங்களைச் செயல்படுத்த முடியாதவர் எப்படி இஸ்லாம் கூறக்கூடிய அமீராக இருக்க முடியும் என்பதைச் சிந்திக்க வேண்டாமா?.

இது வரை நாம் கூறிய விஷயங்களை நன்றாகச் சிந்தித்தால் அமீர் என்பதற்கு இஸ்லாம் கூறும் இலக்கணம் விளங்கும்.

அதாவது அதிகாரம் இருப்பவர் தான் இஸ்லாத்தில் அமீராகக் குறிப்பிடப்படுகின்றார். அமீருக்குக் கட்டுப்படுவதை வலியுறுத்தும் ஹதீஸ்களும் அத்தகைய அதிகாரமுடைய அமீருக்குக் கட்டுப்படுவதையே வலியுறுத்துகின்றன என்பதை விளங்கலாம்.

மேலும் இந்த அதிகாரங்களில் எதுவுமே இல்லாத இயக்கங்களின் தலைவர்களை அமீர் என்று கூறுவதையோ, அவருக்குக் கட்டுப்படாதவர் காஃபிராகி விடுவார் என்று கூறுவதையோ ஏற்றுக் கொள்ள முடியாது.

போட்டி அமீருக்கு வழங்கப்படும் தண்டனை.

**حدثنا زهير بن حرب وإسحق بن إبراهيم قال إسحق أخبرنا و قال زهير حدثنا جرير عن الأعمش عن زيد بن وهب عن عبد الرحمن بن عبد رب الكعبة قال دخلت المسجد فإذا عبد الله بن عمرو بن العاص جالس في ظل الكعبة والناس مجتمعون عليه فأتيتهم فجلست إليه فقال كنا مع رسول الله صلى الله عليه وسلم في سفر فنزلنا منزلا فمنا من يصلح خباءه ومنا من ينتضل ومنا من هو في جشره إذ نادى منادي رسول الله صلى الله عليه وسلم الصلاة جامعة فاجتمعنا إلى رسول الله صلى الله عليه وسلم فقال إنه لم يكن نبي قبلي إلا كان حقا عليه أن يدل أمته على خير ما يعلمه لهم وينذرهم شر ما يعلمه لهم وإن أمتكم هذه جعل عافيتها في أولها وسيصيب آخرها بلاء وأمور تنكرونها وتجيء فتنة فيرقق بعضها بعضا وتجيء الفتنة فيقول المؤمن هذه مهلكتي ثم تنكشف وتجيء الفتنة فيقول المؤمن هذه هذه فمن أحب أن يزحزح عن النار ويدخل الجنة فلتأته منيته وهو يؤمن بالله واليوم الآخر وليأت إلى الناس الذي يحب أن يؤتى إليه ومن بايع إماما فأعطاه صفقة يده وثمرة قلبه فليطعه إن استطاع فإن جاء آخر ينازعه فاضربوا عنق الآخر فدنوت منه فقلت له أنشدك الله آنت سمعت هذا من رسول الله صلى الله عليه وسلم فأهوى إلى أذنيه وقلبه بيديه وقال سمعته أذناي ووعاه قلبي فقلت له هذا ابن عمك معاوية يأمرنا أن نأكل أموالنا بيننا بالباطل ونقتل أنفسنا والله يقول يا أيها الذين آمنوا لا تأكلوا أموالكم بينكم بالباطل إلا أن تكون تجارة عن تراض منكم ولا تقتلوا أنفسكم إن الله كان بكم رحيما قال فسكت ساعة ثم قال أطعه في طاعة الله واعصه في معصية الله و حدثنا أبو بكر بن أبي شيبة وابن نمير وأبو سعيد الأشج قالوا حدثنا وكيع ح و حدثنا أبو كريب حدثنا أبو معاوية كلاهما عن الأعمش بهذا الإسناد نحوه و حدثني محمد بن رافع حدثنا أبو المنذر إسمعيل بن عمر حدثنا يونس بن أبي إسحق الهمداني حدثنا عبد الله بن أبي السفر عن عامر عن عبد الرحمن بن عبد رب الكعبة الصائدي قال رأيت جماعة عند الكعبة فذكر نحو حديث الأعمش**

யார் ஓர் இமாமிடத்தில் பைஅத் செய்து அவரிடத்தில் கைப்பிடித்து உளமாற உறுதி வழங்குகின்றாரோ அவர் இயன்ற வரை அந்த இமாமுக்குக் கட்டுப்படுவாராக! அவருக்குப் போட்டியாக இன்னோருவர் கிளம்பி விட்டால் அந்த போட்டியாளரின் கழுத்தைத் துண்டித்து விடுங்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி)

நூல் : முஸ்லிம்

ஒரு அமீர் இருக்கும் போது அவருக்குப் போட்டியாக இன்னொருவர் கிளம்பினால் அவரைக் கொல்ல வேண்டும் என்று இந்த ஹதீஸ் கூறுகின்றது. நபியவர்களின் இந்தக் கட்டளை தான் அமீர்களைக் கண்டு பிடிக்க சரியான உரை கல்லாகும்.

இன்று தமிழகத்தில் மட்டுமே நூற்றுக்கணக்கான சங்கங்கள், அமைப்புகள், ஜம்மிய்யாக்கள் உள்ளன என்பதை முன்பே குறிப்பிட்டோம். இவற்றில் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி அமீர்கள் உள்ளனர். மேற்கண்ட ஹதீஸின்படி

ஒருவர் இருக்கும் போது இன்னொருவர் அமீர் என்றால் அவரைக் கொல்ல வேண்டும்.

அப்படியானால் யார், யாரைக் கொல்வது?

அடுத்த இயக்கத்தில் உள்ள அமீரைப் பற்றிக் கூட கூற வேண்டியதில்லை. தங்கள் அமைப்பிலேயே போட்டி அமீர் வந்தால் என்ன செய்வார்கள்? அவரைக் கொல்ல வேண்டும் என்று இவர்கள் கொள்கை அளவில் கூட ஒத்துக் கொள்வதில்லை.

ஒரு இயக்கத்தின் கொள்கை சரியில்லை என்றால் சர்வ சாதாரனமாக அந்த இயக்கத்திலிருந்து பிரிந்து இன்னொரு இயக்கத்தைத் துவங்குகிறார்கள். இப்போது முதல் இயக்கத்தின் அமீர் என்பவர் இந்த ஹதீஸைச் செயல்படுத்துவாரா? நிச்சயமாகச் செய்ய மாட்டார். அப்படியானால் இவர்களின் மனசாட்சிக்கு தாங்கள் கூறுவது தவறு என்பது தெரிந்திருந்தும் அமீர் என்ற வார்த்தையை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதில் என்ன சந்தேகம்?

## பயணத்தில் அமீர்.

ஆட்சியும், அதிகாரமும் பெற்றவர் தான் அமீர் என்று குறிப்பிடப்படுகின்றார். அத்தகையவருக்குக் கட்டுப்படுவதைத் தான் அமீருக்குக் கட்டுப்படுவது குறித்த ஹதீஸ்கள் கூறுகின்றன என்பதை இது வரை கண்டோம்.

ஆட்சி, அதிகாரம் வழங்கப்படாதவர் அமீர் எனக் குறிப்பிடப்பட்டதற்கு எந்த ஒரு ஆதாரத்தையும் காண முடியவில்லை.

நாம் தேடிப்பார்த்த வகையில் பயணத்தில் மூவர் சென்றால் அதில் ஒருவர் அமீராக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தும் ஹதீஸ் தான் இவர்களின் ஒரே ஆதாரமாக உள்ளது.

மூன்று பேர் பயணம் புறப்பட்டால் ஒருவரை அமீராக்கிக் கொள்ள வேண்டும் எனக் கூறப்படுகின்றதே! இந்த அமீரிடம் ஆட்சியும், அதிகாரமும் கிடையாதே என்று வாதிட முடியும்.

எனவே இது குறித்து விரிவாக நாம் அறிந்து கொள்வோம்.

**حدثنا علي بن بحر بن بري حدثنا حاتم بن إسمعيل حدثنا محمد بن عجلان عن نافع عن أبي سلمة عن أبي سعيد الخدري أن رسول الله صلى الله عليه وسلم قال إذا خرج ثلاثة في سفر فليؤمروا أحدهم**

மூவர் பயணத்தில் புறப்பட்டால் அவர்கள் தம்மில் ஒருவரை அமீராக்கிக் கொள்ளட்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஸயீத் அல்குத்ரி

நூல் : அபூதாவூத் 2241

**حدثنا علي بن بحر حدثنا حاتم بن إسمعيل حدثنا محمد بن عجلان عن نافع عن أبي سلمة عن أبي هريرة أن رسول الله صلى الله عليه وسلم قال إذا كان ثلاثة في سفر فليؤمروا أحدهم قال نافع فقلنا لأبي سلمة فأنت أميرنا**

ஒரு பயணத்தில் மூவர் இருந்தால் அவர்களில் ஒருவரை அமீராக்கிக் கொள்ளட்டும் என்று நபியவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

இதை அபூ ஸலமா நாஃபிவு இடம் கூறிய போது நீங்கள் எங்கள் அமீராக இருங்கள் என்று நாஃபிவு கூறினார்.

நூல் : அபூதாவூத் 2242

இவ்விரு ஹதீஸ்களிலும் ஃபல் யுஅம்மிரூ (அமீராக்கிக் கொள்க) என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. மூவர் பயணம் சென்றால் அதில் ஒருவர் அமீராக இருக்கட்டும் என்ற வாசகம் அதிகாரம் இல்லாதவர்களுக்கும் அமீர்கள் எனக் கூறலாம் என்பதற்கு ஆதாரமாக உள்ளது என்று வாதிடுகின்றனர்.

பிரயாணத்தில் அமீராகத் தேர்வு செய்யப்பட்டவர் இஸ்லாமியக் குற்றவியல் சட்டங்களை நிலை நாட்ட முடியாது. கட்டாயப்படுத்தி ஸக்காத்தை வசூலிக்க முடியாது. இன்ன பிற அமீரின் கடமைகளை அவரால் செய்ய இயலாது. அவ்வாறு இருந்தும் அவர் அமீர் எனக் கூறப்பட்டுள்ளது. இது முன்னர் நாம் எடுத்துக் காட்டிய அனைத்து ஆதாரங்களுக்கும் எதிராக இருப்பது போல் தோன்றுகிறது.

ஆனால் இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் அமீராக்கிக் கொள்ளட்டும் என்ற வார்த்தையைப் பயன்படுத்தினாலும் இவரை விட பலமான அறிவிப்பாளர்கள் அமீராக்கிக் கொள்ளட்டும் என்பதற்கு பதிலாக இமாமாக ஆக்கிக் கொள்ளட்டும் என்ற வார்த்தையைப் பயன்படுத்தியுள்ளதால் அதுவே சரியான அறிவிப்பாகும். எனவே இந்த ஹதீஸ் இது வரை நாம் எடுத்துக் காட்டிய ஆதாரங்களுடன் முரண்படுகிறது என்ற வாதம் அடிபட்டு விடுகிறது. இது குறித்த விபரங்களை விரிவாக நாம் காண்போம்

அபூ தாவூதில் இடம் பெற்ற முதல் ஹதீஸின் அறிவிப்பாளர்கள் வருமாறு :

1-நபிகள் நாயகம் கூறியதாக அபூ சயீதுல் குத்ரி

2-அபூசயீதுல் குத்ரீ கூறியதாக அபூஸலமா

3-அபூஸலமா கூறியதாக நாஃபிவு

4-நாஃபிவு கூறியதாக முஹம்மத் பின் அஜ்லான்

5-முஹம்மத் பின் அஜ்லான் கூறியதாக ஹாதிம் பின் இஸ்மாயீல்

6-ஹாதிம் பின் இஸ்மாயீல் கூறியதாக அலி பின் பஹ்ர்

7-அலீ பின் பஹ்ர் கூறியதாக அபூ தாவூத்

அபூ தாவூதில் இடம் பெற்ற இரண்டாவது ஹதீஸின் அறிவிப்பாளர்கள்.

1-நபிகள் நாயகம் கூறியதாக அபூஹுரைரா

2-அபூஹுரைரா கூறியதாக அபூஸலமா

3-அபூஸலமா கூறியதாக நாஃபிவு

4-நாஃபிவு கூறியதாக முஹம்மத் பின் அஜ்லான்

5-முஹம்மத் பின் அஜ்லான் கூறியதாக ஹாதிம் பின் இஸ்மாயீல்

6-ஹாதிம் பின் இஸ்மாயீல் கூறியதாக அலி பின் பஹ்ர்

7-அலீ பின் பஹ்ர் கூறியதாக அபூ தாவூத்

ஆய்வுக்குள் நுழையும் முன் இந்த அறிவிப்பாளர்களின் பெயர்ப் பட்டியலை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். ஏனெனில் இந்த ஆய்வுக்கு இந்தத் தகவலை நினைவுபடுத்திக் கொள்வது அவசியமாகும்.

இவ்விரு ஹதீஸ்களும் அலீ பின் பஹ்ர் என்பவர் வழியாக இமாம் அபூ தாவூதுக்குக் கிடைத்துள்ளது.

அபூ தாவூதை விட வயதில் மூத்தவர்களான ஹதீஸ்கலை அறிஞர்கள் இமாம் அபூ சுர்ஆ, இமாம் அபூ ஹாதம் ஆகியோருக்கும் இந்த ஹதீஸ்கள் கிடைத்தன. இவ்விருவருக்கும் அலீ பின் பஹ்ர் வழியாக அந்த ஹதீஸ் கிடைக்கவில்லை. மாறாக அவருக்கு முந்தைய அறிவிப்பாளரான ஹாதிம் பின் இஸ்மாயில் வழியாக இந்த ஹதீஸ்கள் இவ்விருவருக்கும் கிடைத்துள்ளன.

அதாவது இமாம் அபூ தாவூத் எவரிடம் இதைக் கேட்டாரோ அந்த அலீ பின் பஹ்ர் என்பவரும் இந்த இரு இமாம்களும் சம காலத்தவர்கள். இந்த ஹதீஸை அலீ பின் பஹ்ர் யாரிடம் கேட்டாரோ (ஹாதிம் பின் இஸ்மாயீல்) அவரிடம் இவ்விருவரும் கேட்டுள்ளனர். இந்த விபரத்தையும் கவனத்தில் வைத்துக் கொண்டு பின்வரும் தகவல்களைப் பாருங்கள்.

**علل الحديث لابن أبي حاتم (ص: 228):**

**225- وسألت أبي وأبا زرعة عن حديث رواه حاتم بن إسماعيل ، عن محمد بن عجلان ، عن نافع ، عن أبي سلمة ، عن أبي هريرة ، عن النبي صلى الله عليه وسلم ، قال إذا كان ثلاثة في سفر فليؤمهم أحدهم فقالا روي عن حاتم هذا الحديث بإسنادين فقال بعضهم عن حاتم ، عن ابن عجلان ، عن نافع ، عن أبي سلمة ، عن أبي سعيد وقال بعضهم عن أبي هريرة والصحيح عندنا ، والله أعلم عن أبي سلمة ، أن النبي صلى الله عليه وسلم مرسل قال أبي ورواه يحيى بن أيوب ، عن ابن عجلان ، عن نافع ، عن أبي سلمة ، أن النبي صلى الله عليه وسلم ، وهذا الصحيح ومما يقوي قولنا أن معاوية بن صالح ، وثور بن يزيد ، وفرج بن فضالة ، حدثوا عن المهاصر بن حبيب ، عن أبي سلمة ، عن النبي صلى الله عليه وسلم هذا الكلام قال أبو زرعة وروى أصحاب ابن عجلان ، هذا الحديث عن أبي سلمة مرسلا قلت من ؟ قال الليث أو غيره**

ஹாதிம் பின் இஸ்மாயீல் - முஹம்மத் பின் அஜ்லான் - நாபிவு - அபூ ஸலமா - அபூ ஹுரைரா என்ற அறிவிப்பாளர்கள் வழியாக ஒரு பயணத்தில் மூவர் இருந்தால் அவர்களில் ஒருவர் இமாமத் செய்யட்டும் என்று நபியவர்கள் கூறியதாக அறிவிக்கப்படும் ஹதீஸ் பற்றி அபூ ஸுர்ஆவிடமும் என் தந்தையிடமும் (அபூ ஹாதம்) கேட்டேன். அதற்கு அவ்விருவரும் இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்கள் தொடரில் இடம் பெற்றுள்ளது. ஒன்று அபூ ஹுரைரா மற்றொன்று அபூ ஸயீத் என்று விடையளித்தார்கள்.

நூல் : இப்னு அபீ ஹாத்தம்

அபூ தாவூத் எந்த அறிவிப்பாளர் வழியாக இந்த ஹதீஸை அறிவித்துள்ளாரோ அதே ஹதீஸ் பற்றித் தான் இவ்விரு இமாம்களிடமும் கேட்கப்படுகிறது. அமீராக

ஆக்கிக் கொள்ளட்டும் (ஃபல் யுஅம்மிரூ) என்ற இடத்தில் (ஃபல் யவும்முஹூம்) இமாமத் செய்யட்டும் என்று இடம் பெற்றுள்ளது.

அதாவது இமாம் அபூ தாவூதை விட மூத்தவர்களான ஹதீஸ்களை ஆய்வு செய்வதில் மேதைகளாகத் திகழ்ந்த இவ்விரு இமாம்களும் மூவர் பயணம் மேற்கொண்டால் அவர்கள் ஜமாத்தாகத் தொழ வேண்டும், ஒருவர் இமாமத் செய்ய வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பிடுகின்றனர். இமாமத் செய்யட்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியது தான் அமீராக்கட்டும் என்று அபூதாவூதில் தவறுதலாக இடம் பெற்றுள்ளது என்பதை இத்தகவலில் இருந்து அறியலாம்.

மேலும் பயணத்தில் செல்லும் குழுவுக்கு அமீர் என்பவர் அவசியம் இல்லை. அவர் அதிகாரம் படைத்தவராக இருக்க முடியாது என்பதால் அபூதாவூதை விட மூத்தவர்கள் அபூதாவூதின் ஆசிரியரின் ஆசிரியரிடம் கேட்டுப் பதிவு செய்தது தான் அபூதாவூதின் அறிவிப்பை விட சரியான அறிவிப்பாக இருக்க முடியும்.

இன்னும் பல நூல்களிலும் அமீராக்கிக் கொள்ளட்டும் என்பதற்கு பதிலாக இமாமாக ஏற்படுத்திக் கொள்ளட்டும் என்று இந்த ஹதீஸ் பதிவு செய்யப்பட்டுள்ளது.

அ

ந்த விபரம் வருமாறு:

1-பைஹகீ

**سنن البيهقي الكبرى (3/ 89):**

**4905 - أخبرنا أبو بكر محمد بن الحسن بن فورك أنبأ عبد الله بن جعفر ثنا يونس بن حبيب ثنا أبو داود ثنا هشام عن قتادة عن أبي نضرة عن أبي سعيد أن النبي صلى الله عليه و سلم قال : إذا كانوا ثلاثة في سفر فليؤمهم أحدهم وأحقهم بالإمامة أقرؤهم أخرجه مسلم من حديث هشام الدستوائي وغيره عن قتادة**

2-முஸ்னத் அபீ யஃலா

**مسند أبي يعلى (2/ 319):**

**1054 - حدثنا محمد بن عباد حدثنا حاتم عن ابن عجلان عن نافع عن أبي سلمة : عن أبي سعيد أن النبي صلى الله عليه و سلم قال : إذا خرج ثلاثة في سفر فليؤمهم أحدهم**

**قال حسين سليم أسد : إسناده حسن**

3-முஸ்னத் தயாலிஸீ

**مسند الطيالسي (ص: 286):**

**2152 - حدثنا أبو داود قال حدثنا هشام عن قتادة عن أبي نضرة عن أبي سعيد ان النبي صلى الله عليه و سلم قال : إذا كانوا ثلاثة في سفر فليؤمهم أحدهم واحقهم بالإمامة أقرؤهم**

4-நஸயீ குப்ரா

**السنن الكبرى للنسائي (1/ 280):**

**(857) أنبأ عبيد الله بن سعيد عن يحيى عن هشام قال حدثنا قتادة عن أبي نضرة عن أبي سعيد عن النبي صلى الله عليه وسلم قال إذا كانوا ثلاثة فليؤمهم أحدهم وأحقهم بالامامة أقرؤهم اجتماع القوم وفيهم الوالي**

5-தப்ரானி அவ்சத்

**المعجم الأوسط (4/ 230):**

**عن بن عمر عن رسول الله صلى الله عليه و سلم قال اذا كان ثلاثة في سفر فليؤمهم احدهم لم يرو هذا الحديث عن نافع بن أبي نعيم إلا زياد بن يونس**

6-நஸாயீ

**سنن النسائي (2/ 77):**

**782 - أخبرنا عبيد الله بن سعيد عن يحيى عن هشام قال حدثنا قتادة عن أبي نضرة عن أبي سعيد عن النبي صلى الله عليه و سلم قال : إذا كانوا ثلاثة فليؤمهم أحدهم وأحقهم بالإمامة أقرؤهم** قال الشيخ الألباني : صحيح

7-முஸ்னத் அஹ்மத்

**مسند أحمد بن حنبل (3/ 24):**

**11206 - حدثنا عبد الله حدثني أبي ثنا يحيى ثنا هشام وشعبة قالا ثنا قتادة عن أبي نضرة عن أبي سعيد عن النبي صلى الله عليه و سلم : إذا كانوا ثلاثة فليؤمهم أحدهم وأحقهم بالإمامة أقرؤهم تعليق شعيب الأرنؤوط : إسناده صحيح على شرط مسلم**

8-தாரிமி

**سنن الدارمى (4/ 22، بترقيم الشاملة آليا) :**

**1301- أَخْبَرَنَا عَفَّانُ حَدَّثَنَا هَمَّامٌ حَدَّثَنَا قَتَادَةُ عَنْ أَبِى نَضْرَةَ عَنْ أَبِى سَعِيدٍ الْخُدْرِىِّ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم-; إِذَا اجْتَمَعَ ثَلاَثَةٌ فَلْيَؤُمَّهُمْ أَحَدُهُمْ ، وَأَحَقُّهُمْ بِالإِمَامَةِ أَقْرَؤُهُمْ . تحفة 4372 إتحاف5674**

9- இப்னு குஸைமா

**صحيح ابن خزيمة (3/ 4):**

**1508 - أخبرنا أبو طاهر نا أبو بكر نا بندار نا يحيى بن سعيد ثنا شعبة حدثني قتادة و ثنا بندار ثنا يحيى بن سعيد عن سعيد بن أبي عروبة و هشام و ثنا بندار ثنا ابن أبي عدي عن سعيد و هشام عن قتادة عن أبي نضرة عن أبي سعيد الخدري : عن النبي صلى الله عليه و سلم قال : إذا كانوا ثلاثة فليؤمهم أحدهم و أحقهم بالإمامة أقرؤهم**

மேற்கண்ட அனைத்து அறிவிப்புக்களிலும் பிரயாணத்தில் அமீரை ஏற்படுத்துங்கள் என்பதற்கு பதிலாக இமாமை ஏற்படுத்திக் கொள்ளுங்கள் என்ற வாசகம் தான் இடம் பெற்றுள்ளது.

மேலும் முஹம்மத் பின் அஜ்லான் என்ற அறிவிப்பாளர் நாபிவு என்பார் வழியாக அறிவிக்கும் ஹதீஸ்களில் வார்த்தைக் குழப்பம் உள்ளது என்று உகைலி என்ற ஹதீஸ் கலை அறிஞர் கூறுகின்றார். அபூ தாவூதில் இடம் பெறும் ஹதீஸை

நாபிவு வழியாகவே முஹம்மத் பின் அஜ்லான் அறிவிக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

முஹம்மத் பின் அஜ்லான் வழியாக மற்றவர்கள் அறிவிக்கும் ஹதீஸ்களில் மூவர் பயணம் சென்றால் ஒருவர் இமாமத் செய்யட்டும் என்று குறிப்பிடப்படுவதே சரியான அறிவிப்பாக இருக்க முடியும் என்பது உறுதியாகிறது.

மேலும் அபூ ஸயீத் (ரலி) அவர்கள் அறிவிக்கும் மற்றொரு ஹதீஸ் முஸ்லிமில் இடம் பெற்றுள்ளது. மூவர் இருந்தால் ஒருவர் இமாமத் செய்யட்டும் என்று தான் அந்த ஹதீஸிலும் கூறப்பட்டுள்ளது.

**صحيح مسلم (2/ 133):**

**1561 - حَدَّثَنَا قُتَيْبَةُ بْنُ سَعِيدٍ حَدَّثَنَا أَبُو عَوَانَةَ عَنْ قَتَادَةَ عَنْ أَبِى نَضْرَةَ عَنْ أَبِى سَعِيدٍ الْخُدْرِىِّ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ - صلى الله عليه وسلم- إِذَا كَانُوا ثَلاَثَةً فَلْيَؤُمَّهُمْ أَحَدُهُمْ وَأَحَقُّهُمْ بِالإِمَامَةِ أَقْرَؤُهُمْ**

ஆகவே பிரயாணத்தில் செல்பவர்கள் தனித்துத் தொழுது விடாமல் மூவரில் ஒருவரை இமாமாக ஏற்படுத்தித் தொழ வேண்டும் என்பது தான் சரியான அறிவிப்பாகும். பயணத்தில் அமீர் ஏற்படுத்துங்கள் என்பது சரியான அறிவிப்பாகாது.

இப்னு அஜ்லான்

நாபிவு

என்ற வழியாக அமைந்திருப்பதே இவ்வாறு முடிவு செய்யப் போதுமான காரணமாகும்.

இஸ்லாத்தில் அமீர் என்ற வார்த்தை ஆட்சி அதிகாரம் இல்லாத எவருக்கும் பயன்படுத்தப்பட்டதில்லை. எனவே அமீருக்குக் கட்டுப்படுங்கள் என்பது ஆட்சி, அதிகாரமில்லாதவர்களுக்குப் பொருந்தாது என்பது சந்தேகமற நிரூபணமாகின்றது.

ஆட்சி, அதிகாரமின்றி, இஸ்லாமிய அரசியல் சட்டங்களை அமுல்படுத்த முடியாத பகுதியில் ஒரு குழுவினர் தமக்கென ஒருவரைத் தலைவராக ஆக்கிக் கொள்வதும், ஆக்கிக் கொள்ளாமலிருப்பதும் அவர்களின் சொந்த அபிப்பிராயத்தில் செய்யப்படும் செயலாகவே எடுத்துக் கொள்ளப்படும்.

அவ்வாறு தலைவராக ஆக்கப்பட்டவர் தன்னை அமீர் என கூறிக் கொள்வதும், தனக்கென மற்றவர்கள் கட்டுப்படுவது மார்க்கத்தின் கடமை எனக் கூறுவதும் கட்டுப்படத் தவறினால் மார்க்கத்தில் குற்றமென வாதிடுவதும் மோசடியாகும்.

இன்றைய சங்கங்கள், ஜம்மியாக்கள், இயக்கங்களில் உள்ள தலைவர்களை அமீர் என்று அழைக்காமல் தலைவர் செயலாளர் போன்ற சொற்களால் அல்லது இவர்கள் தேர்ந்தெடுத்துக் கொண்ட சொற்களால் அழைத்துக் கொள்ளலாம். மார்க்கத்துடன் முரண்படாத வகையில் அந்த இயக்கத்திற்காக விதிகளை ஏற்படுத்திக் கொள்ளலாம். அந்த விதிகளை மீறுவோர் மீது இயக்க ரீதியாக நடவடிக்கை எடுக்கலாம்.

ஆனால் நான் தான் அமீர். அமீருக்குக் கட்டுப்படுவது மார்க்கக் கடமை; எனக்குக் கட்டுப்பட மறுத்தால் அல்லாஹ்விடம் தண்டணைக்கு உள்ளாவீர்கள் என்று வாதிடுவது அப்பட்டமான மோசடியாகும்.

## முடிவுரை

இஸ்லாமிய சமூக அமைப்பில் உலகம் முழுவதும் ஒரே ஆட்சி தான் நடக்க வேண்டும். அந்த ஒரே ஆட்சித் தலைவரின் பிரதிநிதிகளாக பல பகுதிகளுக்கும் அமீர்கள் (ஆளுனர்கள்) நியமிக்கப்படுவார்கள்.

இந்தக் கட்டுக்கோப்பு குலைந்து விடக் கூடாது என்பதற்காகத் தான் அமீருக்குக் கட்டுப்படுதல் வலியுறுத்தப்பட்டுள்ளது.. அமீர்களும் மனிதர்கள் என்பதால் அவர்கள் தமது பணியில் தவறுகள் செய்யலாம். அதற்காக அவர்களுக்கு எதிராகப் புரட்சியிலும், கிளர்ச்சியிலும் மக்கள் இறங்கினால் இஸ்லாமிய அரசு பலவீனமடையும். முஸ்லிம்கள் சிதறி சின்னாபின்னமாகி விடுவார்கள். இதைத் தடுக்கவே அமீருக்குக் கட்டுப்படுதல் மார்க்கக் கடமையாக்கப்பட்டுள்ளது.

ஆனால் இன்று ஆளாளுக்கு அமீர் பட்டம் சூட்டிக் கொண்டு முஸ்லிம்களைச் சிதறடிப்பதற்கு அமீர் என்பதைப் பயன்படுத்துவது கொடுமையிலும் கொடுமையாகும்.

தனக்குக் கீழே உள்ள மக்களின் வறுமையைப் போக்குதல், அவர்களுக்கு ஆபத்து நேரும் போது களமிறங்கி போர் செய்தல் போன்ற உயரிய நோக்கத்திற்காக உருவாக்கப்பட்ட இஸ்லாமியத் தலைமையாக இங்கே உள்ள எந்தத் தலைமையும் ஆக முடியாது.

தப்லீக், ஜமாத்தே இஸ்லாமி, ஜாக், ஜமாஅத்துல் முஸ்லிமீன், சிம், அஹ்லே ஹதிஸ், ஸலப், பைஅத் கூட்டம் போன்ற ஏராளமான அமைப்புக்கள் தங்கள் தலைமை இஸ்லாமியத் தலைமை எனக் கூறிக் கொள்கின்றன.

அமீருக்குக் கட்டுப்படுதல் பற்றிய ஆதாரங்களையெல்லாம் எடுத்துக் காட்டி தங்களுக்குக் கட்டுப்படுவது மார்க்கக் கடமை என்கின்றனர்..

இது முற்றிலும் தவறாகும். உன்மையான இஸ்லாமிய அமைப்பில் இத்தனை இயக்கங்களும், இத்தனை அமீர்களும் இருக்க முடியாது.

மக்களை ஒன்றுபடுத்துவதற்காகக் கூறப்பட்ட அமீருக்குக் கட்டுப்படுதல் என்பது மக்களைப் பிரிப்பதற்கும் தங்களுக்கெனத் தனிக் கூட்டத்தை உருவாக்குவதற்கும் இவர்களால் பயன்படுத்தப்படுவது விசித்திரமாக உள்ளது.

அமீருக்குரிய கடமைகள் பலவற்றில் ஒரு கடமையைக் கூட தங்களால் செய்ய முடியாது என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டே இவர்கள் இவ்வாறு வாதிட்டு வருகின்றனர்.

இவர்கள் இயக்கம் நடத்துவதே தவறு என நாம் கூறவில்லை இஸ்லாமிய ஆட்சி முறை இல்லாத நிலையில் நம்மால் இயன்ற அளவுக்குச் செயல்படுவதில் தவறு இல்லை.

எந்த ஆத்மாவையும் அதன் சக்திக்கு மீறி அல்லாஹ் சிரமப் படுத்தமாட்டான். இதைக் கவனத்தில் கொண்டு தனித்துச் செயல் படுவதை விட கூட்டாகச் செயல்படுவதால் பயன் அதிகமாகலாம் என்ற நோக்கத்தில் இத்தகைய இயக்கங்கள் செயல்படுவதை நாம் குறை கூறவில்லை.

நாம் கூறுவது என்னெவெனில் தங்களால் இயன்ற அளவுக்கு அவர்கள் செயல்படட்டும். ஆனால் இது தான் இஸ்லாமியத் தலைமை, இவர் தான் அமீர் எனக் கூறி மக்களை ஏமாற்ற வேண்டாம். அமீருக்குக் கட்டுப்படுதல் என்பது தம்மைப் போன்றவர்களுக்குக் கட்டுப்படுவது தான் என்றும் வாதிட வேண்டாம்.

இத்தகையோருக்கு கட்டளையிடும் அதிகாரம் ஏதும் கிடையாது. அவ்வாறு கட்டளையிடுவார்களானால் அதற்குக் கட்டுப்பட வேண்டிய அவசியம் யாருக்கும் கிடையாது. அதை மீறுவோர் அமீருக்குக் கட்டுப்பட மறுத்த குற்றத்தைச் செய்தவராக மாட்டார். ஏனெனில் இவர்களில் யாரும் அமீர் அல்ல.